# மழையும் ஜீவநதிகளும்



swari

தமிழ்ப்புத்தகாலயம்

நா.காமராசன்

மலையும் ஜீவநதிகளும் (புதுக்கவிதைத் தொகுதி)

முதற் பதிப்பு : நவம்பர், 1980

விலை ரூ. 6. 00

MALAYUM JEEVA NATHIGALUM

Poems in Tamil

by NAA. KAMARASAN



First Edition : November, 1980

148 Pages

18 x 12.5 c.ms.

10 Pt. Letter

10.9 kg. White Printing

Box Board Binding

Vetri Achagam, Madras-5

TAMIL PUTHAKALAYAM

58, T. P. Koil Street

Triplicane, Ice House

MADRAS - 600 005

Price Rs. 6 - 00

அச்சிட்டோர் :

வெற்றி அச்சகம்

சென்னை - 5

# போதிமர நிழலில்

நமது வாழ்காலம் பிரச்சினைகளின் தாயகம்.

இன்றைய இந்தியாவிற்கு புத்தரை மறுபடியும் அழைத்து வந்து, அவருக்கு ஞானோதயம் ஏற்பட்ட அதே போதி மரத்தடியில் உட்கார வைத்தால், அவர் நிம்மதியாகத் தூங்கிவிடுவார்.

நியாயங்களே இருட்டில் இருக்கும்போது, ஞான வெளிச்சம் எப்படி உருவாக முடியும்?

எனவே வாழ்வின் அடித்தளத்தில் உரிமைக்காகப் போராடும் மக்களுக்கு அருகே போய் அவர்களோடு என்னை ஐக்கியப் படுத்திக் கொள்கிறபோதுதான் எனக்கு ஞானம் பிறக்கிறது. அதுகூட அந்த மக்களுக்கு நியாயம் கிடைக்க வேண்டும் என்கிற ஞானம்தான்.

எனவே அவர்களே எனது போதி மரங்கள். அவர்களின் காலடியில், இந்த பூமியின்மேல் விழும் சின்னஞ் சிறிய நிழல்களே எனக்கு ஞானத்தைப் போதித்தன. அந்த ஞானம் இந்தச் சமூகத்திலுள்ள அனைவருக்கும் நியாயம் கிடைக்க வேண்டும் என்கிற சமூக விஞ்ஞானப் பார்வைதான்.

யாரோ, யாருக்கோ ஞானப்பால் கொடுத்ததாக நமது மதக் கதைகள் சொல்கின்றன. ஆனால் இன்று நாம் விரும்பினாலும் ஞானப் பால் குடிக்க முடியாது.

விமர்சனம் தலைமை தாங்கும் விஞ்ஞான யுகம் இது. "புத்தரது கண்ணீர்த் துளிகளே கடலில் முத்துக்களாக இருக்கின்றன" என்பது பழைய பொன்மொழி. யாருக்கும் தெரியாமல் நீர்மூழ்கிக் கப்பலில் கடலுக்குள் போய் புத்தர் எப்படிக் கண்ணீர் விட்டிருக்க முடியும்?

காலமாற்றம் பல புதிய சிந்தனைகளை உருவாக்குகிறது. அதற்காக முற்றாகவே பழமையை வெறுத்துவிட முடியாது. பழமையை உரமாகப் பயன்படுத்த வேண்டும். ஆனால் அது உணவாக முடியாது.

இலட்சியங்கள் உன்னதமானவை. ஆனால் மனித வாழ்வு பல்வேறு கூறுகளைக் கொண்டது.

முதலாளித்துவம் ஒழியும் வரை மனைவிக்கு முத்தம் தர மாட்டேன் என்று சொல்கிற புரட்சிவாதிகளை நான் பார்த்த தில்லை! "போல்ஸ்ராய் தியேட்டரை"த் தகர்க்க முயன்ற தோழர்களிடம், 'சங்கீதம், கலை எல்லாம் அனைவருக்கும் சொந்த மானவை. அது முதலாளித்துவச் சின்னமல்ல' என லெனின் கூறியதை நாம் மறந்துவிடக் கூடாது. ஆனால் கலை, இலக்கி யங்களைவிட சமூக விஞ்ஞானப் பார்வை உயர்வானது. விழுப் புண் பெற்ற ராணுவ வீரர்களுக்குப் போடப்படும் மருந்து போன்றவையே கலை, இலக்கியங்கள்.

மலையும் ஜீவநதிகளும் உள்ள இடத்தில் நியாய உணர்வுகளின் அஸ்திவாரத்தில் சோசலிச மாளிகை உருவாக வேண்டும் என்பதே என் விருப்பம். இந்தத் தொகுப்பில் சமூகத்தை விமர்சிக்கும் நையாண்டிக் கவிதைகள், இயற்கை, காதல், மனிதகுல உணர்வுகள் இவைகளை வெளியிடும் கவிதை கள் போன்ற பல்வேறு இலக்கியச் சோதனை முயற்சிகள் மேற் கொள்ளப்பட்டிருக்கின்றன.

எனது திறமைக்கு நல்ல சந்தர்ப்பங்கள் கிடைக்க வேண்டு மென்று உழைத்துக் கொண்டிருக்கும் எனது உதவியாளன் ஆருயிர்த் தம்பி பொன். பிரபாகரனுக்குக் கண்ணீரைக் காணிக் கையாக்குகிறேன்.

எனது பிற கவிதை நூல்களைப் போலவே இதனையும் வெளி யிடும் தமிழ்ப் புத்தகாலயத்தாருக்கும் — எனது வாழ்காலத் திலேயே என்னைச் சிறந்த கவிஞனாக ஏற்றுக் கொண்ட இளைய தலைமுறையினருக்கும், உவமைக் கவிஞர் சுரதா அவர்கட்கும், பண்பட்ட மூத்த எழுத்தாளர்களுக்கும் நன்றி சொல்கிறேன்.

வழக்கம்போல இந்தப் புத்தகத்தின் இலக்கிய மதிப்பை எடை போடும் பொறுப்பை வாசகர்களிடமும், விமர்சகர்களிட மும் ஒப்படைக்கிறேன்.

அன்புள்ள

**நா. காமராசன்**

27-11-80

## மலையும், ஜீவநதிகளும்!

நாம்
அந்தகாரத்தில் தீபம் ஏற்றுவோம்.
அதன் ஆயிரம் திரைகளை எரிப்போம்.
பனி மூட்டத்திற்குள் நடுங்கும்
வசந்த காலத்தைச் சிரிக்க வைத்து,
பூமி தேவியை "புஷ்பிணி" ஆக்குவோம்!

புதுயுக சரித்திரத்தை அவளது
புகுந்த வீடாக்குவோம்!
அறுவடைக் காலத்தின் தானிய மணிகளைச் சேகரித்துவிட்டு,
அதற்குப் பிறகு நாம் பூத்தொடுக்கலாம்!

காடுகள் இருட்டை வளர்த்தால் — அவைகளைக்
காட்டுத் தீயால் சுடுவோம்;
புரட்சிப் புயலால் அதை அணைத்துவிட்டு — அங்கே
புது ஒளி வீசும் வைரங்களைத் தேடுவோம்!

உலகம் பாலைவனம் ஆவதற்குள்—
உயர்ந்த மலைமுகடுகளைக் குடைந்து,
ஒருகோடி ஜீவ நதிகளை
உற்பத்தி செய்வோம்!

# தாய்நாட்டின் முகம்!

முகமெல்லாம் கருத்த களைபோல் தாடி!
கடைக்காரரிடம் பேரம் பேசி—
கூரான 'குட்டி வெள்ளை ஏர்' வாங்கி,

கன்னவயலை உழுது,
முத்தவிதை தூவும் முன்—
ரத்தபாச மழை ஈரம்!

ஒற்றை வரப்பு மீசையின் கீழ்—
உதட்டு வாய்க்காலில்
ஓடும் சக்கரைத் தண்ணீரால்
உறவின் இரவு விளைச்சல்!

தாய் வயிறு மட்டும் எப்போதும்—
தங்கக் களஞ்சியம்தான்!
தந்தத்தால் வலிமைபெறும் போர்த் தேர்போல்,
தாய்ப்பாலால் இளமைபெறும் பொன்தேரே!

உனக்குப்
"பார்த்தாலே பசிதீரும் முகம்!" — ஆனால்

பாரத தேவிக்குப்
பார்க்கும் இடமெல்லாம்
பசி ஒன்றே முகம்!

நீ—

தாய்முகத்தைப் பார்த்தழவா பிறப்பெடுத்தாய்?
தாய்நாட்டைச் சிரிக்க வைக்கப் புறப்படுவாய்!

## காருகள்

நீண்டநெடும் காலங்கள்
நள்ளிரவில் கடந்து போய்விட்டன!

தூக்கத்தையே—
மரணமாகக் கருதிவிட்ட
மனிதர்களைத் தட்டி எழுப்ப முடியாமல்
சூரியனும் தூங்கிவிட்டான்!

முதியவர்கள் இருண்ட காலத்திற்கு
ஓவியம் எழுதுகிறார்கள்.
வாலிபர்கள் இரவுகளைக் கண்களால்
எரித்து வெளிச்சம் உண்டாக்குகிறார்கள்.

மறைந்திருக்கும் காடுகளில் இருக்கும்
பனித்துளிகளைப்போல்—
மானுடத்தின் கண்ணீர்த் துளிகள்
அனாதைகளாய் இருக்கின்றன.

புல்வெளிகளிலேயே ஆடுகள்
வெட்டப்படுவதைப்போல்

போர்க்குணம் இல்லாதவர்கள் பிறந்த நாட்டிலேயே
வீழ்த்தப்படுகிறார்கள்.
சோசலிச விடியலை அறிமுகப்படுத்தும்
சேவல்கள் கூவட்டும்.

சுதந்திர வெறியோடு,
சூரிய வெளிச்சத்தில்
மயில்கள் ஆடட்டும்!

# மனைவிக்கு ஒரு காதல் கவிதை

குழந்தைப் பருவத்தில்
நாம் சண்டை போட்டோம்.
அது ஒரு குறும்புக் கவிதை.
இன்னும் நாம் என்ன குழந்தைகளா?
அப்படியே ஆக விரும்பினாலும் — நம்
அப்பாக்களும், அம்மாக்களும்
கண்மூடி, ஒரு
காலவட்டம் சுற்றிவந்து — நம் வீட்டுக்
கதவருகே நிற்கிறது.

சித்தப்பாக்களின்
இரவு நேரத்
திண்ணைப் பேச்சில் — நான் உனக்கு
அத்தானாய் ஆக்கப்பட்டேன்.

பெண் நாயின் வாலைப் பிடித்தபடி தெருவெல்லாம்
நானிருப்பேன் — அப்போது
ஆண் நாய்மேல் சவாரி செய்யும்
அழகான பாவாடைத் தாமரை நீ!

புடலங்காய்போல்
உடல் வளர்ந்த பின்னாலே
பூமாலை மாற்றினோம்.

ஊமையாகத்தான் இருந்தாய்
முதலிரவில்—
ஒரு குழந்தை பிறந்தவுடன்
பகலெல்லாம் வார்த்தைப்
படையெடுப்பு!

கல்யாணப் பந்தலை மறக்கவைத்த
வாய்ப்பந்தல்—
வாலிபத்தின் செல்லச் சண்டை.
பூத்தவுடன் உதிரும் பன்னீர்ப்
பூப்போல என்னைப்
பார்த்தவுடன் உதிரும் கண்ணீர்ப்பூ!

குளிக்கும்போது
முதுகு தேய்த்து விடுவாய்! — வருமானம்
குறையும்போது — உன்
முகப்பார்வை
தேளாகக் கொட்டும்.

நாம்
தேங்காய்சில் கணக்கெழுதித்
தினம்தோறும் குடும்பம் நடத்துவோம்.
நீயோ தென்னைமரம் நடுகின்ற தம்பிக்குத்
தீராத கஷ்டமென்று படுத்துவாய்.

நான் உன்னை
அடித்ததுண்டு.
அப்போதெல்லாம்
வலிமட்டும்தான் உனக்கு
மனக்காயம் எல்லாம் எனக்குத்தான்!

எல்லா நண்பர்களும்
என் எழுத்துக்கு பக்தராகி
இலக்கியதேவன் என்று
எதிரிலே கோவில் கட்டிடுவார்—

"இலக்கிய தேவன் இங்கே?
பக்தனே!
இறைவனின் உண்டியல் எங்கே?"
என்றுநான் அவரிடம் கேட்டதுண்டு!

புதுநகையை அடகு வைத்துப்
புன்னகையில் அழகு வைப்பாய்!

நான்
முழுக்கைச் சட்டை போட்டு
மடிக்காமல் வேட்டிகட்டி
நடப்பதென்றால்
சைக்கிள் ஓட்டுவதைப்போல்
சங்கடப்படுவேன்.

தெருவிலே போகும்போது—
இடையிடையே 'மணி' அடிப்பதுபோல்
இருமுவேன்.

கைகள் நடுக்கோடு
கண்டபடி போராட
ஸ்கைலாப் விழுவதுபோல்
சனிசிந்தித் தரையெல்லாம் விழவைப்பேன்

திருப்பதி உண்டியல்போல் வாய்திறந்து கொண்டு
நான் மாத்திரை விழுங்குவேன்.
நீயோ— 'காவேரி' என்று மகளுக்குப்
பேர் வைத்துவிட்டு
ஊர் சுற்றப் போய்விடுவாய்.

நான்
பௌடரைத் தேடும்போது மட்டும்
பாத்திரம் தேய்ப்பாய்.
கொண்டை போடுவதுபோல்
சண்டை போடுகிறாயே?
இப்படியும் — ஒரு இன்பமா?
இது — புரிகிறது கண்ணே எனக்கு!
ஏன் — உனக்கும்தான்!

## புதுக்கவிதை

1

பகல்மேகங்கள் கலைகின்றன.
சூரியன் என்னுடைய
யாத்திரைப் பாதைக்கு தீபம் ஆகிறான்.

எனது பயணவேளையில்—
வானம், பூமிச் சேர்க்கையென்று கருதி மயங்குகிறது.
எனது இதயம் சோகத்தால் நிரம்பியிருக்கிறது.
எனக்கு அழைப்புவிடும் குரலின்
உருவம் தெரியவில்லை.

ஏ! தென்றலே!
வெயிலின் மௌனத்தில் பாடும்
கண்ணீரின் ராகத்தை
உலகம் எனது பிரிவைத்
தாங்க முடியாமல்
முணுமுணுக்கிறதா?

இதுவரை பூக்காத புது மலர்களின் வாசத்துத்
தொலைதூரத்தில்—

கவிதைத் தீவின் சுவாசம் மணக்க
என் கவிதை மலர்களைச்
சூடக் காத்திருக்கிறதா?

2

அந்தத் தீவிற்குப் போன கவிஞர்கள்
தோல்வியோடு திரும்புகிறார்கள்.
நான் அதன் கரையில் இருந்து
எனக்காகக் காத்திருக்கும்
படகுகளைப் பார்க்கிறேன்.

சூரியன் மறைந்த பிறகு—
தண்ணீர் இரவில்
எனது பயணம் ஆரம்பமாகிறது—
பூமியில் எனது பழைய பாடல்களை விட்டுவிட்டு
நான் கதறுகிறேன்.

3

மேல்காற்று வீசுகிறது.
நான், எழுதப் போகும் புதிய பாடல்களில்
பாடல்களில் மனப்பயணம் செய்கிறேன்.

காற்றும், தண்ணீரும் அந்தப்
பாடல்களை இசைத்து
என்னை வரவேற்கின்றன.
எனது இதயத்தை வாசிக்கும்
பொன் உலகம் அது.
பகல் விடைபெறுகிறது.
மாலை நேரம் வருகிறது.

என்னோடு போட்டியிட்ட தோழர்கள்
கரையிலேயே நிற்கிறார்கள்.
விலங்குகளை உடைத்தெறிந்துவிட்டு
சிறகுகளோடு
நட்சத்திர வெளிச்சத்தில்
எனது பாடல்களை அரங்கேற்றுகிறேன்.
எனது புறப்பாட்டில்
சங்கீதத்தின் முணுமுணுப்பில்
'காற்று' என்னை பூமிக்குத்
திரும்பிவரச் சொல்கிறது!

4

அந்தத் தீவு என்னை
அரசவைக் கவிஞனாக
ஏற்றுக் கொள்கிறது.
அது சங்கீதத்தின் ராஜசபை.

இந்த நாடோடிக் கவிஞனுக்காகக்
காத்திருந்த கூடாரம்.
நான் ஆத்மாவின் கவிதைகளைத் தேடி அலைந்தேன்.
அந்தக் கூடாரம் அதை என்மடியில்
எடுத்து வைக்கிறது.
எனது ஆத்மாவின் மௌனத்தில்
அமைதியாகத் தவம் செய்து
நான் வார்த்தை வரம் பெறுகிறேன்.
சாம்பலாய்ப்போன இதயத்தின்
ரகசிய இருட்டில்
ஆத்மாவின் கவிதை நெருப்பு
பற்றி எரிகிறது.

5

கற்பனை வானத்தின் புயல்
அதன் மேகங்களில் தென்றலாகிறது.
குரல்கள் அற்ற காட்டு நிழல்களில்
காற்று என் பாடல்களைக் கேட்டுக்
கண்ணீர் விடுகிறது.

எனது இதயத்தின் சிருஷ்டி தாகம்
பாடல்களைப் பாடுவதற்கு முன் இருக்கும்
இசைக் கருவிகளைப்போல் ஒரு
மௌன கர்வம் கொள்கிறது.

எனது வார்த்தை
வாழ்வின் அர்த்தத்தை
அதற்குள் புதைத்துக்கொண்டு
அடிமனத்தில் முகம் காட்டுகிறது!

6

கவிதைத்தீ மூண்டெழும்போது
எனது மனத்தின் பூம்புகை
கருமணம் சிந்துகிறது.
என் கண்களின் தீபம்
தாறுகவே எரிகிறது.
இடிவிழுந்து எரியும்
விஷவிருட்சம்போல்
இருள்களைச் சாய்த்துவிட்டு
இதயப்பறவை பறந்து
வெளிச்சத்திற்கு வந்து
பாடுகிறது.

7

எனது சொந்த நிறங்களின்
கருவறையில் இருந்து

நான் பூரண நிலவாகி உயரப் பறக்கிறேன்.
அதனால்
இரவிலும் என் பயணப்பாதை
குருடாகவில்லை.

என் கைகளே எனக்குச்
சுதந்திரம் தருகின்றன.
இலக்கிய பூமியின்
விலங்குகளை உடைத்தெறிகிறேன்.

வெளிச்சமற்ற எனது சோக தீபத்தில்
நெருப்பு முளைத்து
நிழல்களுக்கும் ஒளி தருகிறது.
தூக்கத்தில் இருந்து எனது
கவிதாசக்தி விழித்தெழுகிறது!

ஓ — வீதிகளே!
ஒவ்வொரு வீட்டிற்கு முன்னும்
ஒரு பாடல் பாடுவேன்.

இரவு கருத்திருப்பதால்—அது ஒரு
யாத்திரைக் குருடன்.
என் கைகளில் அதைப் பிடித்துக் கொண்டு
இரவைப் பகலாக்குவேன்.

8

எனது சுவடுகள் பிரகாசமாகின்றன.
உலகம் என் பின்னுல் வருகிறது.
எங்கள் இதயங்கள் இருட்டைக் கழுவுகின்றன.
எனவே அங்கிருந்து
வானத்திற்கும் வெளிச்சம் கிடைக்கிறது.
ஒரு சூரியன் நூறுகோடிச் சூரியனுக
உதயம் ஆகிருன்.
அந்த ஒளியில் வசந்தம்
அரும்புவிடாமல் பூவாகவே மலர்கிறது!
பூமியின் இதயம் சிருஷ்டி வேகத்தில்
ஆயிரம் பூமியாக மாறுகிறது!
சோகங்கள் எல்லாம் பூத்து வந்து
புன்னகையின் சிம்மாசனத்தில்
உட்கார்ந்திருக்கிறது!

9

கவிதையைத் தீவு காதலிக்கிறது — அந்தக்
காதலின் பரிசுகளால்
அதனுடைய வெற்றிடம்
நிரப்பப்படுகிறது.
கனவுகள் கூட
கவிதை பாடுகின்றன.

ஆனால் — கவிதை கனவாகவில்லை.
வாழ்க்கை கவிதை ஆனது.

## 10

என் கண்கள் உறங்கவில்லை.
அந்தத் தீவின் அமைதியான
சமதர்மத்தை ரசிக்க
எனக்கு—
இரண்டு கண்களும்
ஒரு பகலும்
ஒரு இரவும்
போதவில்லை!
நான் உறக்கம் இழந்தால் என்ன?
அங்கே மானுடசக்தி விழித்தெழுந்துவிட்டது.

மேகத்தைத் தவிர யாரும் அழவில்லை.
அவர்கள் பல பாதைகளில் நடந்தார்கள்.
ஆனால் ஒரே இடத்திற்கு வந்தார்கள்.
இலை உதிர் காலத்தில்கூட அவர்களுடைய
இதயம் பூத்திருந்தது.

## 11

அவர்கள் இலட்சியத்தை மனதின்
அடி ஆழத்தில் விதைத்தார்கள்.

அது உறங்குவதைப் போலிருந்தது.
ஆனால் அதன் மொட்டு
ஒருநாள் இதயத்தைத் திறந்தது.
உதிராத மலரானது!
அங்கே அமைதி மட்டும் இருந்தது.
அது ஒருநாள் பேசத் தொடங்கியது.
அந்தத் தீவு காது கொடுத்துக் கேட்டது.
அதற்குப் பிறகு—
கைகளே ஆயுதம் ஆயின — அவர்கள்
காலத்தை வென்றார்கள்.

## 12

காற்று தண்ணீர் அலைகளில் ஓய்வெடுக்கிறது.
பறவைகளின் கடைசிப்பாடல் முடிகிறது.
சூரியாஸ்தமனம்
மணப்பந்தலுக்கு இரவு நிழலைத் தருகிறது.
சந்தியகால வெளிச்சம் திருமண வேளையை
நினைவூட்டுகிறது.
வானத்திலே இராவெல்லாம் எரியும்
விளக்குகள் ஏற்றப்படுகின்றன.
இரவு மாப்பிள்ளைத் தோழனாக
வருகிறது.
மாலை நட்சத்திரங்கள் எல்லாம்
மணப்பெண்களாய்க் கண்சிமிட்டுகின்றன!

சந்திரன் யாருக்கு மாலையிடுவான்?
அவன் பிரம்மச்சாரியாகவே இருந்து கொண்டு
அந்தத் தீவுக்கு வாழ்க்கை வரம்தர
வெளிச்ச 'வேள்வி' நடத்துகிறான்.

## 13

இரவுக் குரல்கள் ஓய்வு கொண்டபின்
கடலின் முணுமுணுப்பு
காற்றைச் சிரிக்க வைக்கிறது.
அவர்கள் தூங்குகிறார்கள்.
என்பாடல் அந்தப்
பாட்டாளிகளைத் தாலாட்டுகிறது.
பூமியின் அழகுப் பறவைகள்
கூடு திரும்புகின்றன.
அங்கே — காதல் கங்கை
அகத்தியனின் குடத்திற்குள்
இருந்ததைப்போல்
அந்தப் பறவை மனிதர்களின்
கூடுகளில் குடியிருக்கிறது.

## 14

கண்மூடி உறங்கும் பூமியில்
யார் தூக்கத்திலிருந்து விழிக்கமுடியும்?

அந்தப் பறவைகளின் கண்கள் விழித்தன.
அங்கே என் கவிதை சிரித்தது.
இலைகள்கூட அசையாத நள்ளிரவில்
காற்றுகூடப் புழுக்கத்தில் தவிக்கிறது.

காதல் மயக்கத்தில் அவர்களின்
உடல்மட்டும் அசைகிறது!
மலர்கூடக் கண்களைமூடி
மொட்டாகிறது.

தேன்நிலவும் தூங்குகிறது.
அவர்கள் மட்டும்
நட்சத்திரங்களைப்போல்
விழித்திருந்தார்கள்.

15

விடியலில் அவர்களின்
காதுகளில் — என்
கவிதைகளைப்
பதிவு செய்தேன்.

அந்தப் பறவை மனிதர்கள் என்பாடலை
எடுத்துக் கொண்டு
வயல்வெளிக்குப் புறப்பட்டார்கள்!

நட்சத்திரங்களைப் போன்ற விதைகள்
பகலில் பூமியில் விழுந்தன
அவர்களது உழைப்பைப் பார்த்துவிட்டு
ஆனந்தம் கொண்ட
பூமித்தாய் புன்னகை செய்தாள் — அது
பூக்களாய் மலர்ந்தன!

# ஒரு விபச்சாரி நடத்திய 'வெண்மணி' நினைவு விழா!

[முதலாளித்துவம் என்கிற காட்டுத்தீ அணையப் போகுமுன், அடங்காத வெறியோடு பாட்டாளி வர்க்கத்தை எரித்த இடம் "கீழ்வெண்மணி." அதற்குப் பிறகும்— அமைதியோடு நடமாடும் இந்த மண்ணில்— ஒரு விபச்சாரி வெண்மணிச் சம்பவத்திற்கு நினைவு விழா நடத்துகிருள். ஒரு பொடிபோடும்— ஜோசியன்— எதிர்கால வெளிச் சத்தைக் காட்டவந்து — அவளது நிகழ்காலத்தை இருட்டாக்கினுன். பணக்காரர்கள் ஐந்து பேருக்கு அவளைப் பத்தினியாக்க ஒரு ஊருக்கு அழைத்து வருகிருன். அவர்களைச் சந்திப்பதற்கு முன்பே— அவள் பழிவாங்கும் படலத்தை எழுதிப் பலரோடு உறவு கொள்கிருள்.

கடைசியாக அந்தப் பணக்காரர்களைச் சந்தித்து வெண்மணி நினைவு விழா நடத்துகிருள்.]

கைப்பொடி ஜோசியன் வந்து
இப்படி ஆயிற்றே என்று
கன்னத்திலே கைவைத்துக் கொண்டான்.

சதிராடிய மலரோடையில்
சதிகாரர்கள் ஆயிரம்
விளையாடவும், குருடாகவே
விழிமூடி நான் தூங்கினேன்.

மூலிகையைக் கண்டெடுத்து
மூடர்களின் காலடியில்—
பலியிட்டு விட்டேனே
பாவி நானென்று பதறினுன்.

முற்றத்தைச் சுற்றிச் சுற்றி
முணங்கலுடன் வலம் வந்து—
உட்காருவான்—எழுந்து நின்று
ஊர்வலம் போவது போல் நடப்பான்.

அவளருகே — சென்ருன்.
அவளோ—
'கண்ணீரின் சுயசரிதம்' நான்தான் என்ருள்.
தவலையிலே மழைத் தண்ணீர் விழுவதைப்போல்
தரையெல்லாம் கண்ணீரைச் சிந்திஞள்.

அவன்—
கண்ணீரைச் சிந்தாமல் நீ வாழத்தான்
கண்டுபிடித்திருக்கின்றேன் வழி ஒன்றை என்ருன்.

சண்டாளன் இவ்வாறு சொல்லும்போது
சரசரவென்றே பலபேர் உள்ளே வந்தார்.
எல்லோரும் அவ்வூரின் பணக்காரர்கள்—
ஏழைகளை எலும்புருவம் ஆக்கும் தீயவர்கள்.

சல்லாபத் தூதுகளை விழியில் ஏந்தி
சந்தன மலரைப் பார்த்தார்.
'உல்லாசப் பாஞ்சாலி' கதையை நாங்கள்
உயிர்ப்பிக்க வந்துள்ளோம் என்றார்.

இந்த மொழி கேட்டவுடன் நொந்துவிட்டாள்.
இதயத்தில் சூழ்ச்சிவலை பின்னுகின்றாள்.
பொய்வரையும் கண்களையும், ஆட்டு மீசைப்
புதர் ஆடும் முகங்களையும், பார்த்தாள்— நாங்கள்
ஐவரும்தான் உன்னழகை அனுபவிக்க
அப்பாவி ஜோசியனைக் கருவியாக்கி,
கைவரையும் நெய்வழியும் செல்வ போகம் தந்து—
காதலுக்கு உன்னை இங்கே அழைத்து வந்தோம்.

ஐவரது மடிமேலும் நாள்தோறும் தவழ வேண்டும்.
அதுவே எம் ஆசையென்று கூறிவிட்டார்.
வந்திடுவேன் இன்றிரவே! உங்கள் வீட்டில்
வைப்பாட்டியாய் இருப்பேன்? நீங்கள் எல்லாம்
சந்தனமும், சவ்வாதும் மணக்கச்
'சப்ரமஞ்ச' கூடத்தில் காத்திருப்பீர் என்றாள்.

[ஒரு சோக இரவில் அவள் அந்த ஐவருக்கும்
பத்தினியானாள்]

1

நடுக்கூடம் தனில்தனியே இருந்தான், கையில்
நாலுமுழ மல்லிகையைச் சுற்றிக் கொண்டு
படுக்கைஅறை விளக்குமட்டும் எரிய, வீட்டுப்
பத்தினிப்பெண் மாடியிலே இருந்தாள்! கணவன்
தொடுவதுபோல் வீசுகின்ற கோடைக் காற்றில்
துயரத்தால்— தூக்கத்தில் ஆழ்ந்து விட்டாள்.

படுகிழவன் ஆனாலும், காமதேவன்
படைத் தலைவன்போல அவன் காத்திருந்தான்.
சோகத்தால் விபச்சாரி ஆனமகள்.
சொர்க்கத்தைப் போல்நடந்து வந்தாள்.

முதல்வீடு இதுதானா துரையே? என்றாள்.
முத்தமிட்டு அவசரமாய் அவளைத் தொட்டு,
விதைநெல்லின் மூட்டையைப்போல் தூக்கிக்கொண்டு
விரித்திருந்த மெத்தைக்குக் கொண்டு போனான்.
சதைமூட்டை நடைபோடும் போதே, காதல்
நாடகத்தை முடித்தவன்போல் மூச்சுவிட்டான்.

2

சலங்கைமணி குலுங்குதல்போல் சிரித்துக்கொண்டே
சாகசமாய் அடுத்தவனின் வீடு நோக்கி,
மலர்த்தோட்ட உடல்மங்கை ஓடுகின்றாள்.
மான்விழிமேல் பனிபொழிய வாடுகின்றாள்.

வலம் வந்த கவிதைத்தேர் போல, வீதி
வழிவந்த அவள் இரண்டாம் வீட்டுக்குள்ளே
கலங்காமல் நுழைகின்ருள்! அவனோ காதல்
பெருமூச்சில் கதைமுடித்துத் தரையில் சாய்ந்தான்.

முடவனுக்கு எதற்காகப் பாட்டு வீணை?
முழுக்குருடன் பௌர்ணமிக்கு ஏங்கலாமா?
நடம்பிடித்த நடையுடைய பருவப் பெண்ணை
நளினமலர்த் தேன்கூட்டை, இளைஞர்கூட்டம்
இடம்பிடிக்கும் எழில்காட்டை, முத்தம் தந்தால்
இனிக்கின்ற மலைப்பலாவை, காமதேவன்
படம்பிடித்த தாமரையை— பாட்டன் மார்கள்
பெண்டாள நினைக்கலாமா? எனச் சிரித்தாள்
கண்டாங்கிச் சேலைத்தேர் காலெடுத்து நடக்கின்ருள்.

3

குதித்தோடிக் கொண்டிருந்தாள் மான்போல், காற்றில்
கொண்டாடிக் கொண்டோடி வந்தாள், பூப்போல்!

சதிராடும் பூக்காடு காதல் என்னும்
சரித்திரத்தை எழுதுகின்ற பார்வையோடு,
அதிவேக மாகமூன்ரும் வீட்டுக் குள்ளே
அடியெடுத்து வைக்கின்ருள்—அவனோ அங்கே
பொதிபோல ஓரத்தில் உறங்கப் போனுன்.
"போய் வருக! நாளை நீ!" என்று சொன்னுன்!

4

நாடகத்துக் காதலைப்போல்—ஆடுகின்ற
நள்ளிரவுத் திருக்கூத்து மாறக் கண்டு
ஆடகப்பொன் ஓடிப்போய், அடுத்த வீட்டில்
யார்உள்ளார் எனப்பார்த்தாள்! அவனோ அங்கே
பாடகனைப் போல்குறட்டைச் சத்தம் தன்னைப்
படிப்படியாய் உயர்த்துகின்ற கோலம் கண்டாள்.
ஏடெடுத்து வெள்ளத்தில் விடுதல்போல,
இதயத்தின் கவலைகளைக் காற்றில் விட்டாள்.

5

பெருங்கூட்டம் வருகிறது! உழைக்கும் மக்கள்
பெண்ணோடு, ஆண்சிறுவர் எல்லாம் ஒன்றாய்த்
தெருக்கூத்து நடத்துவதைப்போல, ஐந்தாம்
திருவாளன் வீட்டின்முன் கூச்சல் போட்டார்.

திருமகளை வரச் சொன்னேன், பிள்ளை செய்த
பருவத்தின் குறும்புக்கு நியாயம் கேட்கப்
படையெடுத்து வந்துள்ளார்! அந்த வீட்டுக்
கதவுக்குத் திறப்புவிழா நடத்தி விட்டார்!

மான்விழியைக் கண்டதுமே, பெண்கள் எல்லாம்
மலர்மாலை போல் சுற்றி அணைத்துக் கொண்டார்.

"நான் விரும்பும் பெண்வேண்டும்! தினமும் காதல்
நாடகத்தை அரங்கேற்ற வேண்டும்!" என்று
கூன்விழுந்த முதலாளிக் கிழவன் பிள்ளை
கூத்தடித்த கொடுமைகளைக் கூறுகின்றார்.

"ஏன் பிறந்தோம்?" எனப்பெண்கள் ஏங்கி நின்றார்.
இவள் அவரைத் தனியாக அழைத்துச் சென்றாள்.
நள்ளிரவு முடிகிறது! அனைவரோடும்
அல்லிமலர்ப் பெண்ணழகி பேசுகின்றாள்.
வெள்ளிநிலா சாய்வதனைக் காட்டி விட்டு,
வெறியோடு தீப்பந்தம் ஏந்தச் சொன்னாள்.

கள்ளமனப் பணக்காரர் ஐந்து பேரும்
கண்மூடித் தூங்குகின்ற வீட்டை எல்லாம்,
அள்ளியிட்டாள் நெருப்பினிலே— வெண்மணிக்கு
அவர்வைத்த நெருப்பவளை எரித்த தென்றாள்!

## உலக சமாதானம்

இரத்தத்தை ஜீவநதியாக ஓடவிட்டு—
அதற்குப் புனிதக் கரைகளைக் கட்டியவர் யார்?

கால வழிச் சரித்திரத்தில்—
கைகளிலே வாளும்
கண்களிலே நீரும் சுமந்த
பெண்களைச் சாம்பலாக்கிச்
சாம்ராஜ்யம் படைத்தவரே!

சுதந்திர மனிதர்களின்
தலைகளை மோத விட்டபின்னால்—
சுடுகாட்டுக் காவலுக்குத்
தாய்நாட்டுத் தூதுவரை
அனுப்பி வைத்த
தலைவர்களே!

இரத்த ஓட்டத்தோடு பிறந்து—மனித
ரத்தத்தை ஓடவிட்டு ரசிப்பவரே!

ஓடுகின்ற ரத்தநதி
ஒருநாள் காய்ந்துவிட்டால்—
வெறிபிடித்த பூமித்தாய்
உங்களிடம் ஓடிவந்து,

'பத்ரகாளி' ஆகி
ரத்ததானம் கேட்பாள்.

ராணுவ வீரனுக்கு மரணவேதனை!
உங்களுக்கு மட்டும்—
ராணுவ மரியாதையா?

வாழ்க்கை வசந்தத்தில் உதிர்ந்து—
மரணப் பாலைவனத்தில்
உங்களால்—
உலர்ந்த உயிர் மலர்கள் எத்தனை?

சாவு மட்டும் தொண்டனுக்கு—
சரித்திரம் தலைவனுக்கா?

எத்தனை நாடுகளின்
ரத்த கங்கைகளில்—
ஏகாதிபத்ய அலைவீச்சு!
ஏழைகளின் பெருமூச்சு!

மலர்ச் செண்டுகள் மீது
வெடிகுண்டுகள் வீசி—
பெண்களின்
காதல் சிறைகளை உடைத்துக்
கற்பைக் கைது செய்யும்
'காலனிக்' கடவுள்களே (?)

இது என்ன ரத்த நரகமா?
இல்லை— ரோஜாக்களின் மரணமா?

இரண்டு சொட்டுக் கண்ணீர் கூட
ரத்தத்தின் எச்சில்தான்.
அதையேனும் சிந்துங்கள்.
அணுகுண்டைச் சகாராவில் புதைத்துவிட்டுச்
சமாதான ஒப்பந்தம் எழுதுங்கள்.
அதில் மட்டும் ரத்தக் கையெழுத்துப்
போடுங்கள்!

## ஞான தீபம்

நான்
கண்ணீர் நிறைந்த
ஞானதீபத்தை ஏற்றி வைக்கிறேன்.
அதன் வெளிச்சத்தில் புதிய பாரதத்தை எழுதுகிறேன்.

எனது குருஷேத்திரப் போர்க்களத்தில்
ஓடும் நதிக்கு
உழைப்பும், அறிவும் கரைகள்.
பேறுவின் மைத்துளிகளே தண்ணீர்.
கனவுகள் புஷ்பங்கள்.
புரட்சியை விழுங்கவரும்
பழமையே சுறாமீன்.
புதுமையே பிரவாகம்.
சந்தர்ப்பவாதம் நீர்ச்சுழல்
சமாதானக் காற்றில் தவழ்ந்து வரும்
சமதர்மமே அலைகள்!
அலைகளின்மேல் ஆயிரம் படகோட்டிகள்
அதில் நானும் ஒரு படகோட்டி!

சமுதாய நதியின் அக்கரையில்—
மனிதத் தேன்வண்டுகள் மொய்க்கும்
மார்க்சீய மகரந்தம் சுமந்த
சோசலிச நந்தவனம்
பூமியைச் சிரிக்க வைக்கிறது.

நதிப் பயணத்தில் இடைவெளியில்
முதலாளித்துவப் புயல் விளைகிறது.
உடல் நடுக்கமும்,
மயிர்ச்சிலிர்ப்பும் உண்டாகின்றன.
தோழர்களே!
கையிலுள்ள துடுப்புகளை
நழுவ விடவேண்டாம்!
இந்தப் புயல்
அக்கரை நந்தவனத்திலிருந்து
துரத்தப்பட்டது.

ஆசைவெறியில் ஆவேசம் கொண்டு
அது சகோதரர்களைச் சூறையாடியது.
ஆயுதம் ஏந்தாமலும்
எதிர்த்துப் போராடாமலும்
இதுவரை நாம் இருந்ததால்
ஏகாதிபத்தியத் தேரானது.

நமக்கும்,
நமது படகுகளுக்கும்,
நதியையே
'தண்ணீர்க்' கல்லறையாக்குவதற்குத்
தாண்டவம் ஆடுகிறது.
"பருவ காலம்" மாறிவிட்டது!

பழைய உடைகளைக் களைந்துவிட்டு
மனிதன்
புத்தாடை அணிவதைப்போல்—
இந்தப் புயலை அழித்துவிட்டு
இளம் தென்றல் வீசப் போகிறது!

சரித்திரத்தின் தொடக்கத்தில் தோன்றுமல்
இடையில் தோன்றும்
எதுவும் மறைந்துவிடும்.
அக்கரைக்குப் போவதற்குக்
கலங்கரை விளக்கம் தேவையில்லை.
ஞானதீபம் போதும்!
தோழர்களே! கையிலுள்ள துடுப்புகளை
நழுவ விடவேண்டாம்!

# கப்பலுக்குள் உறங்கும் கடல்கள்

பூமியில் இருக்கும் பெண்களே!
உங்களுக்காகக்
கடலில் இருந்து பாடுகிறோம்!

இங்கிருந்து கடிதம் எழுத முடியாது.
எங்கள் பாடல்களும் உங்கள்
காதுகளைத் தொடாது.
ஏனென்றால்...
காற்றுக்கு உங்கள்
விலாசம் தெரியாது.

ஆனாலும்...
காமதேவனின் அம்புகளைக்
கடல் அலைகளும் வீசுகின்றன.
ஆகவே உங்கள்...சொர்க்கத்திற்கு
வரமுடியாவிட்டாலும்,
இந்த நரக வேதனையை மறப்பதற்கு
நாங்கள் பாடுகிறோம்.

கடலுக்கு இதயம் இருந்தால்...
நீலநிற உப்புத்தண்ணீரைக்கூட
இந்தப் பாடல்கள்
இனிக்க வைக்கும்.

எத்தனையோ நட்சத்திரங்கள் இருளிரவில்
வானத்தில் தனிமை கொள்வதைப் பார்க்கிறோம்.

எங்களைப் பிரிந்து பூமியில்
தனிமை கொள்ளும்
புனித மலர்களே!
உங்களைப் பாடுகிறோம்.
புயல் வீசும்போது கப்பலை ஓட்டுகிறோம்.

எங்கள் இதயப் புயல் பூமிக்கு வரும்போது
தென்றலாகும் இரவைப்
பாடுகிறோம்.

காதல் விழாவிற்கு...
இதழ்களால்—வரவேற்பு இதழ் எழுதும்
காலம் என்று வரும்?

எங்கள் காகிதமும், பேனாவும், மையும்
வானத்தில் பறந்து
கரைசேரத் துடிக்கின்றன.
ஆனால்... நாங்கள்
கப்பலின் அடித்தளத்தில் இருக்கிறோம்.

## தமிழ் வளர்கிறது!

வேலி மல்லிகை
வெளியே அமைதியாக இருக்கிறது.
உள்ளே...
'சப்த' அரண்மனையின்
அரசர் தனது
அடிமைகளைப் பிரம்புச் செங்கோலால்
அடிக்கிறார்!

அவரை எல்லோரும் அறிவார்கள்.
ஆனால் அவர் கொடுத்த அறிவு மட்டும்
யாருக்கும் புரியவில்லை!
காலை நேரத்தில் சோகம்
அவருக்கு முகமாகும்.
புரோகிதர்களைவிட வேகமாக
வார்த்தைகளை முணுமுணுப்பார்.
ஆனால்—சிறுவர்களைக் கட்டுப்படுத்தும்
மந்திரசக்தி அவருக்கு இல்லை.

அவருடைய சிரிப்புக் கதைகள்
தாத்தாவுக்கும்
அப்பாவுக்கும் சொல்லப்பட்டு

பிள்ளைக்கும்
வப்சாவழியாக வரும்
பழைய பஞ்சாங்கம்.
அதனால்—அவருக்கு மட்டும் உற்சாகம்!

கடுமையான வார்த்தை
கண்டிப்பான பார்வை.
"கோரஸ்" பாடலைப் போலப்
பாடம் நடத்தி விட்டுத்
"தனிமை கொள்ளும்" வாழ்க்கை!

சரியாகப் பாடம் நடத்தாமல்
கிராம மக்களுக்கு வரும்
தபால்களுக்குப்
'பரீட்சை' எழுதுவதுபோல்
பதில் எழுதிக் கொடுப்பார்.

சுருக்கமாகப் பேசாமல்...
சுற்றி வளைத்து
வார்த்தைகளை நீட்டித்
"தமிழ்" வளர்ப்பார்!

# கிராமக் கிளியோபாத்ரா

கதிர்களைத் தாலாட்டும்
காற்றுக்குள் பூமுடித்து,
கனவுக்குள் விழிமூடிக்
கன்னிமகள் நடக்கின்றாள்!
புதையலைப்போல் பிறந்தவளோ
பூவாகிச் சிரிக்கின்றாள்.
இதழ்களுக்குள் அலைவீசும்
இளமைக்குத் தலைவணங்கும்
புன்னகையின் பேரரசி
புஞ்சைவழி போகின்றாள்.

கண்ணழகு பார்த்தவர்க்குக்
கட்டழகைத் தந்துவிட்டு
சிந்தாத குழல் அருவி
சாய்ந்தாடும் தோள்அசைய
அந்தியிலே நடக்கின்றாள்—
ஆசைமனம் துடிதுடிக்க!
வானம் வெளிவாங்கி
மேகம் ஒளிவீசும்
மோனம் அளந்தபடி.
மோகமகள் போகின்றாள்!

## சாயங்காலப் பதினி

சாயங்காலப் பதினி—இது
சாயங்காலப் பதினி!

ஓலைத் தூக்கில் அருந்தி
சாலை ஓரம் மயங்கி
சாய்ந்து சாய்ந்து
நடக்கும் போது
சாகசங்கள் ஆடும்!

'ஈ' விழும்முன் உறிஞ்சி—ஒரு
ஈரவேட்டை ஆடி
பூமலர்ந்த கண்ணிரண்டும்
பொன்கனவில் உறங்கும்—
சாயங்காலப் பதினி!

[நெல்லை மாவட்டத்தின் கடற்கரை ஓரத்து மணல் ஊர்களில்—ஆரோக்கியத்தையும், உறக்கத்தையும் தரும் மதுவின் எதிர்ப்பதம் இந்தச் சாயங்காலப் பதினி.]

# "தண்ணீர்ப்பூ' வசந்த விழா!

காற்ருேடு விளையாடிச்
சாரலிலே இளைப்பாறிக்
கண்மூடித் திறக்கும்முன்ஞல்
கடலாகிப் பெய்தமழை!

விண்ணின் நிறம்வெறுத்து
வெள்ளைடர்போல் வெளியேறி,
மண்ணின் நிறம் வாங்கி
'மகாத்மா'வாய் ஆனமழை!

வாசலுக்கு முன்ஞலே
வந்து விளையாடி,
ஓசைக்குத் தொட்டில்கட்டி
ஒதுங்கி நடந்தமழை!

இடிஓசை முடிந்தபின்ஞல்
வளையோசை போல் குலுங்கிப்
படியேறி வந்தமழை
பனித்துளியின் படையெடுப்போ?

சரமின்னல் சிறுநாரின்
சாகசத்தில் அடங்காமல்
தரைஎங்கும் கொண்டாடும்
'தண்ணீர்ப்பூ' வசந்தவிழா!

# மனித மந்தை

காலல வீதியில்—
சந்திர சூரியர்
வந்து போயினர்!
நதிகள் ஆடின.
கடல்கள் பாடின.

ஆறு பருவமும்
மாறி மாறியே,
பூமி எங்குமே
பவனி வந்தன!

குயிலும், கிளிகளும்
மயிலும் கூடியே,
இயற்கை நாடக
மேடை ஏறின.

எந்த மாற்றமும்
இன்றி இங்கொரு
மந்தை மானிடர்
வந்த வழியிலே
நடந்து போகிறார்!

# காதலே உன் பொற்காலம்?

வசந்தங்கள் எங்கேயும்
அழகாக இருப்பதுண்டு.
வாலிபத்தில் அதுவே ஓர்
பேரழகாய் மின்னும்.

வெயிலுக்கு வாடுகின்ற
ஓடைகளைப் போல,
விழாவசந்தம் வாடிவிடும்
காலத்தின் முன்னே!

வசந்தத்தில் சிறகடித்து
விளையாடும் பறவை
புயலடித்தால் கூடிழந்து
விழிநீரில் ஆடும்!

காதலுக்கும் இளமை என்னும்
கண்வசந்தம் இங்குண்டு.
கண்ணீரில் அதற்குப்பின்
காதல்மலர் உதிர்கிறது.

தாய்நாடு திரும்புகின்ற
யாத்ரீகன் போல் காதல்
ஞாபகங்கள் திரும்பிவரும்
பொற்காலம் வரவேண்டும் கண்ணே!

## நதிக்கரையில்

ஆற்றங்கரை ஓரத்திலே
நேற்றின் மழை ஈரத்திலே
காற்றடிக்கும் நேரத்திலே—

கலகலவென மணி அசைந்திடக்
கடும்புயலென நடையிடும்—பல
கன்றுகள் ஓடின புல்வெளியில்—அவை
சென்றதும் நின்றன என்விழியில்!

மலைகள் நனைந்து நனைந்து
வெயிலில் உலர்ந்து,
கறுத்து ஜொலித்தநிறம்—அவை
மடுவில் விழுந்து எழுந்து
கரையில் நடந்து
களிக்கும் மிருக இனம்.

# குறும்புக்காரி

"இடுப்பில் குடம் எடுத்து
எங்கேயோ வழிநடந்து
தளுக்கிக் குலுக்கிச்
சிரித்து மினுக்கித்
தவழத் தவழத்தன்
அழகில் மயங்கித்
தண்ணீர் பிடித்து வரும் மங்கையோ?
கொடிமுல்லேயோ? இடைஇல்லேயோ?
அடி அல்லியே! அழகு வெள்ளமே!
உனே அள்ளவே, உள்ளம் துள்ளுதே"—என
ஆயிரம் கவி பாடினர்.

கொண்டை மீதினில்
செண்டு மல்லிகை,
கொள்ளே கொள்ளேயாய்
ஏந்தி நிற்கிருள்!
வண்டு விழிகளில்
கெண்டை மீன்களைக்
கொண்டு போய் அவள்
குறும்பு செய்கிருள்!

# வைரப் பனித்துளி

சித்திரைக் கோடை முத்திரை ஆகிச்
சிவந்து கிடந்தது மாமரம்—அந்தச்
செந்தளிர் ஆடைச் சித்திரத் தோடு
தவழ்ந்து நடந்தது பூங்குயில்.

மங்கல் பிறைநாண் சூடிய பின்னரே—ஒரு
மாதத்தில் 'புஷ்பிணி' ஆனது வெண்ணிலா!
கங்குலில் சுடர்மீன் தீபமும் மின்னவே—அதன்
கார்முகில் வீதியில் கார்த்திகை வந்தது!

ஓடமே வெண்குளம் ஆனது—பிறைக்
கோடுகள் ஓவியம் ஆனது!
வானத்தில் பொன்மலர் பூத்துச் சிரித்தது—அங்கு
வைரத்தின் பனித்துளி சிந்திக் கிடந்தது!

## ஒரு கோடி

திண்டுபோலப் புல்வெளி
திவலையாகப் பனித்துளி!
கெண்டைமீன்கள் துள்ளியே
சண்டைபோடும் நதிவழி!
குடைபிடிக்கப் படைஎடுத்து
கடைவிரித்து நிழல்கொடுத்துக்
கூட்டம் கூட்டமாக உள்ள தோப்புகள்—அதில்
இடைமரத்துக் கிளைகளில்—தேன்
அடைவளர்த்துச் சிறகசைத்து,
அடிமரத்தின் அடியிலே
படியளக்கும் ஈக்களாம்!
நீரில் அலைக்கரம்! வேரில் பலாப்பழம்.
நிழலில் பசியுடன் தூங்குகிறார்!!
தாரில் மலைவாழை, ஊரில் மலர்ச்சோலை
தணலில் வயிறுகள் வாடுவதோ?
பூக்காடு மாங்காடு
பொற்கதிர் ஆடும் வயற்காடு!
தேக்கோடு மூங்கிலும்
தென்றலில் ஆடும் பெருநாடு!
திக்கற்றுப் போனவர்.
திசைவழி தேடுவோர்
தினம்தினம் இங்கே ஒரு கோடி!

## இரவே! வா!

கொத்துமுத்து வெண்சிரிப்புக்காரி—ஒரு
கூடைமலர் சூடும் அலங்காரி!
பத்து விரல்எடுத்து மேனியைச்
சிறைப்பிடிக்கும் சிங்காரி—ஒய்யாரி—
செந்தேன் ஏரி—நீ கைகாரி!

கொட்டிவைத்த உயிர்வசந்தச் சோலை—என்னைத்
தொட்டு விளையாடும் மலர்மாலை!
கட்டிவைத்த செங்கரும்புச் சாறு
கதை படிக்கும்,
கண்ஜாடை—பொன் ஆடை—
என்மேடை—தேன்ஓடை!

ஓரிரவில் இல்லறத்தின்
சாரமெல்லாம் கூற வந்த
ஈர இதழ்காரி
இன்பத் தேரில் ஆடி ஆடி
இரவில் ஓடி வாடி!

# இதோ ஒரு சாம்ராஜ்யம்!

விழிவேலில் நெஞ்சம் தடுமாறும் கொஞ்சம்
விளையாடும் மஞ்சம் கதைபேசும்.
இதழ்மீது சிந்தும் ஒரு கோடி சந்தம்
இளங்காற்றில் வந்து இளமேனி தந்து கவிபாடும்.
மனவானில் மின்னும் யுவராணி என்னும்
மதுமோகச் சின்னம் கவிராஜன் நெஞ்சை அரசாளும்!

குளிர்மாலை நேரம் இதழோர ஈரம்
இடையோடு சேரும் நதியாகும்.
பதமாகக் கெஞ்ச, இதமாக வஞ்சி
வளையோசை கொஞ்சிச் சதிராடும்
பருவத்தின் தூது வருகின்ற போது
ஒருகாதல் சாம்ராஜ்யம் உருவாகும்.

சூடி வைத்த கோடி மலர்க்
காடுபோல் ரதி — நிலாக்
கோடி வந்து ஜாடை மின்னலோடு மின்னுதே!
வம்பு செய்யும் காமன் அம்பை
வாரி வீசியே — விழி
வாலிபக் குறும்பு செய்யும்
மாலை நேரமே!

தொட்டுத்தொட்டுப் பட்டுக்கிளி
தோளில் ஆடுவாள் — இதழ்
தேடிவந்த ஆடிவெள்ளம்
ஓடி ஆடுவாள்.
ஆவல் கொண்டு அருகில் வந்து
ஆசைச் சிந்து பாடுகின்றவள் — உடலில்
மேவும் செங்கரும்பில் சாறு
மீறி ஊறக் கூடுகின்றவள்.

கொடியிடையில் குளிர்மதிபோல்
முகம் மலர்ந்த பூவினுள்
மறுபடியும் மலர்ந்து வந்து
மங்கையாக ஆடினுள்.

பருவமென்ற தூரிகைக்கு ரெண்டுகை — அதன்
படைஎடுப்பில் நிறம் எடுத்தாள் பவள மல்லிகை.
பகலைப் போல இரவை மாற்றும் புன்னகை — அதில்
பவனிவந்து உலகை ஆளப்பிறந்த கன்னிகை.

## பாதை தெரிவதற்கு . . .

நினைத்தபடி நடக்கவில்லை.
நினைவுகளும் பின்வாங்கவில்லை.
நெஞ்சுக்குள் கனவுகளின் "ராஜ பார்வை"
நேரம் வரும் என்று காத்திருக்கும்.

வாழ்க்கை வாசலோ
கதவுகளே இல்லாமல்
யாரையோ எதிர்பார்க்கும்!
திறந்த வீட்டுக்குள் நுழைந்து
துரத்தப்படும் கால்கள்—
திரும்பிவரும்.

வந்தவழி மறைந்துவிடும்.
வரும்போது
குட்டிச் சுவரைப் பார்த்த இடத்தில்
கோபுரம் உயர்ந்திருக்கும்.
வலைக்குள்ளே அகப்பட்டு
வாய்பொத்தி நிற்க
"வலையே" விசாரணை செய்யும்!
அதன்
குற்றச்சாட்டுகளைக் கேட்டுத் — தலை
குனிந்திருக்கும்.

பலாத்காரம்தான் வலையை அறுக்குமோ?
மூத்த தலைமுறையின்
முடிகளைக்கூடச் சேகரித்துப்
பழங்குப்பை கொட்டும்
பாதையெல்லாம் வலைப்பின்னல்...

பாதை தெரிவதற்கு — ஒரே ஒருமுறை
பலாத்காரம் தேவைதான்!

## கண்ணாடி மாளிகை

பாவை வண்ணம் கோவில் கொண்ட
தேவி அல்லவோ — ஒரு
ஜாதி முல்லை காதலுக்குத்
தூது வந்ததோ?

கைபூத்துக் கண்பூத்துக்
கனகமணிப் பொன்வண்ணம் பூத்து
கட்டுடலில் விட்டதொரு
காமதேவன் தேரோட்டம் பார்க்கிருள்.

கண்ணாடி முன்னாடி ஒருகோடி ஆடையைக்
கட்டுடலில் கட்டுதற்குக்
கட்டாத கற்பனை மாளிகையில் நின்றபடி
கண்மூடி ஒத்திகை பார்க்கிருள்.

## முதல் தொடர்கதை

சந்தனமோ? இவள் மந்திரமோ?
சந்திரனின் தேரோ?
தாமரையாள் — மணம்
சிந்தியதோ? வரும் அந்தியிலே
சுகம் முந்தியதோ? எதுவோ? — உயிர்
மண்டபம் எங்கும் மனக்குகை ஓவியம்
வரைந்திட வந்தவளோ — இவள்
தென்னவன் தேரில் படரும் மல்லிகையோ — ஒரு
மன்மத பல்லவியோ?

இருளில் சந்தன விசிறி வீசுவாள்
இதய ராகம் பாடிப் பேசுவாள்.
அருகில் மாருதம் வருகுதே என்பாள்!
அணைத்தகை—
அடியிலே வந்து விடியுதே என்பாள்!
விழிகள் மயங்க விழுந்து படுத்துவாள்.
எடுத்து வைத்துக்
கொடுத்த முத்தம்
முடித்துத் தொடங்குவாள்!

## எங்கள் ஊர்

தூரமாய் நீலமலை — தூவானம் போடுமிடம்
ஊரென்று சொல்வார்கள்! ஊரிலே மனிதரில்லை.

வெறும் புஞ்சைத் தரைகாய, வெயிலங்கே அரசாளும்!
பெரும்வெளியில் விதைதூவப் பருவமழை இல்லாமல்
வேலையில்லாத் திண்டாட்டம்! வயல்கூடத் தரிசாகும்.
காலைமுகம் சிரித்துவிட்டால் கட்டுடல் தோள்மேலே
ஏர்தூக்கி, வெளியூர்கள் எங்கெங்கோ ஓடி
கால் வயிற்றுக் கஞ்சிக்கு, நாளெல்லாம் போராடி,
கால்வாயில் நீர்பாய்ச்சி, கழனியிலே களையெடுத்து,
உச்சிவெயில் நேரத்தில் பச்சைவயல் ஈரத்தில்
ஒருநாள் கூலிக்குத் திருநாள் தேர்போல
ஏரோட்டி வாழும் ஏழைகளின் கூடாரம்!

ஊரென்று சொல்வார்கள்! ஊரிலே மனிதரில்லை.

**ஏ! மேய்ப்பரே!**
**புல்வெளியைக் காட்டுங்கள்!**

தேவனைப் பிரார்த்தனை செய்து
கூந்தலை அழித்துவிட்டு
முகத்திலே
பூவைத்துக் கொண்டதைப்போல்
சிரித்தபடி வந்தாள்!

மாதாவின் கோவிலுக்கு — அவளது
செல்ல மகள்
செயற்கை மலடியாக்கப்பட்டு
அனுப்பப்படுகிருள்.

மாட்டுக் கொட்டத்தில் பிறந்த
மனித மலரை
மகானுக்க —
மாட்டுப் பெண் ஆகாமல் — அந்த
மங்கை வசந்தமலர் உதிர்கிறது!

அனதைப் பிள்ளைக்குப்
'பால் பவுடர்' தருபவள்
அன்னையாகிப் பிள்ளைக்குப்
பால்தரக் கூடாதா?

ஏசுவே!
கணவனோடு அவள் பைபிளைப் படித்தால்
இரண்டு கிறிஸ்தவர்கள்
கிடைப்பார்களே!

அவர்கள் தொட்டில் கட்டினால் —
உனது
தேவாலயத்திற்குள் எத்தனை குழந்தைகள்
பூப்பூவாய் நடந்துவரும்!

அவள் ஆலயத்தில்
தேவதூதனைத் தொழும்போது
குழந்தையைச் சுமந்தபடி
கொஞ்சுகின்ற மேரி அன்னை!

அப்போது—
மெழுகுவர்த்திகூட—
அழுகிறது அவளுக்காக!

ஏ! மேய்ப்பரே!
உங்கள் மந்தையில் இருக்கும்
மங்கை ஆடுகளுக்கு
இளமைப் பருவம் காதல் இரைதேடும்
புல்வெளியைக் காட்டுங்கள்!

# ஆயிரம் தெய்வமும் ஆறடி மண்ணும்!

சாராயம் குடித்த பாவாடைப் பூசாரி
சதங்கை கட்டிக் கொண்டே ஆடுகிறான்.
சதிராடும் கன்னிப் பருவமயில் முகம் தேடுகிறான்.
கள்ளோடு, வெள்ளாட்டுக் கறியோடு
"காளி! காளி!" என்று
கண்மூடி வெறியேறிக் கதறுகிறான்.
சாமி அருளென்று
ஜனங்கள் நினைக்கிறார்—வரும்
சந்தன மலர்களை—அவள்
நினைப்பில் அணைக்கிறான்.
மண்குடம் உடைத்து மண்வாரி இட்டபின்
மடியும் உடலுக்குக்
கண்கண்ட தெய்வம் எதற்கு?
காற்றோடு ஓடிக் கதையாகும் கூட்டுக்கு
மூச்சுக்கு முந்நூறு கடவுள் எதற்கு?
ஆறடி மண்ணிலே அடங்கி முடிவதற்கு
ஆயிரம் தெய்வம் எதற்கு?
பாடை கட்டிப் போகும்
பயணம் வருவதற்குள்—
கோவில்கட்டி ஆடும்
கொண்டாட்டம் எதற்கு?

## தேவதையின் சபைக்கு வந்த கோடாங்கிகள்!

பொட்டுவைத்துப் பூமுடித்துப்
'புதையலே' என்றழைத்துக்
கட்டி அணைத்தவளே! தாயே! என்
கதையைப் பார்! என்றழுதாள்.

விம்முவாள்! விழுந்து புரளுவாள்!
விசித்து, விசித்தழுது—கண்ணீர்
வெள்ளத்திலே விழிமூடுவாள்.

தும்முவாள்! துடிப்பாள்—
துக்க தேவதை, பக்கத்திலே வந்து
நிற்பதைப் போலவே முகம் காட்டுவாள்.

சந்தன மேனியின் மேல் விழுந்து
சாமியாடும் கலைந்த தலைமுடியை,—ஒரு
கையினுல் ஒதுக்கியே
பையச் சிரிப்பாள்—
பத்ரகாளி போல் இருப்பாள்.

ஆடவர்கள் யார்வந்து நின்ருலும்
ஆங்கார ரூபியாய்—அவரை
அலங்கோலம் செய்வாள்.

அம்பிகை பெற்ற பிள்ளையை
யாரடா தொடுவதென்று—
தும்பைப்பூ மேனி துள்ள
தொடைகள் குதிக்கக் குதிக்க
தோள் தட்டி மிரட்டுவாள்.

வேஷம் கட்டிக் கொண்டும்
வேடிக்கை காட்டிக் கொண்டும்
பேயோட்ட வந்து பெண்டாளத் துடிக்கும்
கோடாங்கிப் பேய்களின் கொட்டம் அடக்குவாள்.

உடம்பெல்லாம் உடுக்கடித்து
உரித்தெடுப்பேன் தோலை என்று
நடுநடுங்கக் குரல் கொடுப்பாள்!
நாயகனைக் கும்பிடுவாள்!

# நான் எழுதாத கவிதைகள்

செண்பகப்பூ மலர்ந்தாடும்! வண்டு வந்து
சிந்துபாடும்! தேனருவி அலைகள் சிந்தும்.

மண்ணுக்குப் பூவுடைகள் போர்த்துகின்ற
வசந்தகாலம் சிரித்திருக்கும்! மேகம் எல்லாம்
பொன்வெயிலால் கண்களையே மயங்க வைக்கும்.
போர்க்களத்தில் ஓடுகின்ற தேர்கள் போலப்
புதுவெள்ளம் பொங்குகின்ற நதிகள் ஓடும்.
பூமியெல்லாம் புதுக்கவிதை பாடும் காடு!
நீரலைகள் குளத்தினிலே வீணை மீட்டும்.

நீர்ப்பூக்கள் ஊமைகளின் கனவைப் போலக்
காரணமே இல்லாமல் தலையை ஆட்டும்!
கண்கவரும் படகுகளில் காதல் நீந்தும்.
ஈரத்தின் சாம்ராஜ்யம்—"தாமரைப்பூ"
என்கின்ற தலைநகரைத் தாலாட்டும்பார்!

ஆலமரம் நிழல்கொடுக்கும் கிணறு! அங்கே
அத்தனையும் முத்துவெள்ளம் ஆன தண்ணீர்.
சால்வைத்து இறைக்கின்ற போது மெல்லச்
சங்கீதம் பாடுகின்ற உருளைச் சப்தம்.

கால்வாயில் நீரோடும்! கறுத்த பெண்கள்
கைகளிலே அதைவாரி முகத்தின் மேலும்,
தோள்களிலும் தெளித்துவிட்டு, களியைத் தின்று
தூங்குகின்ற மரநிழலைக் கொஞ்சும் தென்றல்!

பனித்துளிகள் முள்ளாகிக் கண்சிமிட்டும்
பனிவாடைப் பொன்வானம்! அங்கே மேகம்
தனித்தனியாய் நீந்துகின்ற கனவுக் கூட்டம்.
தரையெங்கும் நிலாவெளிச்சம்—தங்கக் கோலம்.
கனிபோல வெண்ணிலவு! விதைகள் போலக்
கண்ணுக்குத் தெரிகின்ற வான மீன்கள்.

இனியென்ன நான்சொல்ல! இயற்கை அன்னை
இதயத்தில் கவிதைகளை எழுதுகின்றாள்!

# அந்தச் சிவப்பு வர்ணம்

உற்சாகம் கொள்ளத் துடிக்கும்
ஒவ்வொருவரும் என் அருகில் வாருங்கள்!
ஒரு நாகரிகமான சமுதாயப் போர் வீரனின்
சரித்திரத்தைச் சொல்கிறேன்!

அவன்
சட்டத்தின் எல்லைகளைத் தாண்டிச்
சத்தியத்தைக்
காப்பாற்ற வேண்டிய
காலத்தில் வாழ்ந்தான்.

காடு அவனது தலைநகரம்.
மரநிழலே அரண்மனை.
மூத்துப் போனபின்
பாவங்களைச் சுமந்து கொண்டிருந்த
போலி நீதியின் பொய்களை எதிர்த்து
வாலிபத்திலேயே அவன்
நாடோடி ஆனான்.

சிவப்பு ரோஜாவையும்விடச்
சிவந்த "செஞ்சட்டை" அணிந்தான்

அத்தச் சிவப்பு வர்ணத்தைக் கண்டு
ரோஜாக்களே மயங்கின!

அவன் ஒரு இருண்ட காலத்தில்
எட்டுத் திசைகளிலும் வெளிச்சமாய் வந்து
துள்ளிக் குதித்து
குதூகலமாகப்
போர்ப்பரணி பாடினன்.

இரவிலே எதிரிகளை வென்றபின்
பகலிலே காட்டிற்கு வந்து
மரநிழலில் நின்றபோது
மரங்களே போர் வெறி கொண்டன.
நிழலும் உயிர் பெற்று
உற்சாகம் கொண்டது
அங்கேதான் நாளெல்லாம் போராடிச் சோர்ந்துவரும் அவன்
ஆனந்தம் கொண்டான்.

அவனது சிவந்த ஆடை
வறுமை இருட்டில் கிடந்த
சேரி மக்களுக்குச்
சூரிய வெளிச்சம் ஆனது.

அவனுல்
பணக்காரர்கள் கண்கள் நிறையக்
கண்ணீர்த் துளிகளைச்
சிந்திஞர்கள்.
ஏழைகள் கைகள் நிறைய
முத்துக்களை ஏந்திஞர்கள்.

[அந்நியர் ஆட்சியிலும், ஜமீன்தார்களின் காலத்திலும்— சில வீர வாலிபர்கள் திருடர்களாக மாறி— காடுகளில் மறைந்து வாழ்ந்து— பலாத்காரத்தின் மூலம் தாய்நாட்டில் சமதர்மத்தை உருவாக்கப் போராடிஞர்கள். அந்தத் தனி மனிதர்களின் வழிச் சாலை அவசரக் கோலத்தில் அமைக்கப்பட்டிருக்கலாம். ஆனுல் அவர்களின் இதயம் நேசித்த இலட்சியம் மகத்தானது. ஒரு கால கட்டத்தில் புரட்சிக்காரர்களாக வாழ்ந்த அவர்களின் கதைகளை எல்லாம் பதிவு செய்யும் உருவகக் கவிதை இது]

## காதலர் வீதி

வெண்முத்துச் சக்கையைப்போல், விளைந்த காட்டில்
வெடித்திருக்கும் புதுப்பருத்தி! வரப்பின் ஓரம்
பொன்னாங்கண்ணிக்கீரை வளர்ந்திருக்கும்.
பொய்ப்பூக்கள் பூசணியில் இருக்கும்! தோட்டப்
பொன்வெண்டைப் பிஞ்சுகளில் உப்பு வைத்துப்
புதுருசியைத் தேடுகின்ற காதலர்கள்
கண்களிலே வெண்ணிலவு வெள்ளம் வந்து
கதைபேசும்! இளம்தென்றல் காற்று வீசும்.

இனிக்காத பூச்சூடும் கரும்புத் தோட்டம்!
இளம்பெண்கள் வெற்றிலையை மென்று கொண்டு—
பனிதூங்கும் ஒற்றையடிப் பாதை போன்ற,
பச்சைநிற வரப்புகளில் அமர்ந்து கொண்டு—
சனிக்கிழமை முறைத்தண்ணீர் நுரைகள் என்னும்
சதங்கைகட்டி ஓடுகின்ற வாய்க்கால் ஓரம்
கனிவாழைக் கால்ஈரம் ஆகும் வண்ணம்
களையெடுத்த களைப்பாற இருந்து செல்வார்!

குடிசைக்கு வெளியினிலே வீதி ஓரம்
கொசுக்கடியின் முத்தத்தில் பாய்விரித்து
வடிவழகுத் திருநிலவை வானம் தன்மேல்
விளக்காக ஏற்றிவைக்கத் தூங்குவார்கள்.

விடியலிலே எழுந்துவந்து, வயலைத் தேடி
வேர்வைமலர் பூத்தபடி விதைத்து விட்டு
முடிவுரையே இல்லாத வறுமைக் கோட்டில்
முகம்புதைத்துக் கண்மூடும் ஏழை மக்கள்

நள்ளிரவில் ஒரு இளைஞன் திருடனைப்போல்
நாலுபக்கம் பார்த்தபடி விழித் தெழுந்தான்.
அள்ளமுடி யாதிருக்கும் ஆசை முல்லை
ஆடுகின்ற பருவத்தின் இன்ப எல்லை—
கள்ளூறும் இதழ் அழகி காலைத் தொட்டுக்
"கண்மணியே" என்றழைத்தான்! அவனுக்காகக்
கள்ள உறக்கம் போட்டுக் காத்திருந்த
கன்னி மகள் செல்லமாக ஊடல் கொண்டாள்.

"அள்ளட்டுமா?" என்றான்; "உழக்கைப் போல
ஆள் உள்ளாய், ஆசையைப்பார்" என்று சொன்னாள்.
"வெள்ளிநிலா அழைக்கிறது கண்ணே!" என்றான்.
"விளாமரத்தின் மேலேறிப் போயேன்" என்றாள்.
"புள்ளிமயில் நீ" என்றான், "முருகா! ஆணின்
புத்தியைப்பார்" என்றபடி ஒதுங்கிக் கொண்டாள்.
"வெள்ளம்போல் வேர்க்கு" தென்றான், "அணையைக் கட்டி
வீட்டுக்குள் போயுறங்கு" என்று சொன்னாள்.

ஒரு கதவைத் திறந்துசென்று பாய் விரித்தான்.
ஒருக்களித்துப் படுத்தபடிக் காத்திருந்தான்.

குறும்போடு வந்தவளோ "குவளை எங்கே?
குளிர்தண்ணீர் இருக்கிறதா?" என்று கேட்டாள்.
"ஒரு முத்தம் போதுமடி" என்றான், "ஐயே—
உதைகிடைக்கும்— ஆசையைப்பார்! போ, போ" என்றாள்.
பெருமூச்சு விட்டபடி காலில் வீழ்ந்தான்.
பெண்ணழகி அப்படியே ஒட்டிக் கொண்டாள்!

# பலி தேவதை!

[என் தேசத்தில், மனித உயிர்கள் தேவதை களுக்குப் பலியிடப்பட்ட ஒரு இருண்ட காலத்தில் இருந்த கருமையான சித்திரம் இது.]

ஆத்திரம் கொண்ட எங்கள்
ஆயிரம் கண் அன்னை—
சாத்திரக் கூத்தாட வந்தாள் — அவள்
சாய்ந்து சாய்ந்தாடுகின்றாள்.

அவள்—
கோபப் போர்க்களத்தினைக்
கொண்டாடுகின்றாள் — நேசரைக்
கொன்றாடுகின்றாள்.

அருள் வேதம் ஓர் கரத்திலே வைத்துத்
தாயானவள்
இருள் வெள்ளம் ஓர் புறத்திலே வைத்துப்
பேயானதேன்?

குறும்புக் குழந்தை போலவே — மலர்ந்து
பிறந்த மேனியாள்! — அவள்
பறந்து, பறந்து பாடினாள் — உடையை
மறந்து, மயங்கி ஆடினாள்.

நெருப்புக் கொழுந்தைப் போலவே
வெள்ளியில் தெரியும் நாக்கிலே—
எரியும் தீயின்
சிவப்புச் சுடரைப் பார்க்கலாம்!

இருட்டு வர்ணம் கொண்ட
கூந்தல் அலங்காரம் (?)
இங்கிருந்து கொண்டே வானத்தில்
குதித்தாடும் ஆங்காரம்!
ஆகாய மேகம் போன்ற மங்கை — அவள்
ஆலயத்தில் பொங்குதே ரத்த கங்கை!

ஒரு
நடையிலே இந்த உலகம்
நடுநடுங்குதே! — எங்கள் இதயம்
கதி கலங்குதே!

## மயான மயில்!

நெஞ்சுக்குள்ளே அன்பு என்னும்
கடல் இருக்குது — உன்னை
நினைக்கும்போது பாசம் என்னும்
அலையடிக்குது.
சஞ்சலத்தில் பிள்ளை மனம்
துடிதுடிக்குது — அது
தாய்முகத்தைப் பார்த்ததில்லை
எனத் தவிக்குது.

எது நடக்கும் எது நடக்காது — அந்த
இறைவனுக்கே அது தெரியாது.
மலர்கள் எல்லாம் இங்கு நடப்பதில்லை.
பனித்துளிகளெல்லாம் முத்தாவதில்லை.
துயரவெள்ளம் என்றும் வடிவதில்லை — சோகத்
தொடர்கதைக்கு ஒரு முடிவும் இல்லை.

வண்ணமயில் தோகை மயில்
அன்னமிட்ட கன்னிமயில்
வாழ்க்கை நாடகத்தில் ஆடவந்து
வானத்திலே பறந்ததம்மா!

முகம் புதைத்து உன் மடியில்
ஒருநாளும் அழுததில்லை.
உன் முகத்தைப் புதைத்த இடம்
உயிரைவிட்டுப் பிரிவதில்லை.

# கால தேவன் விமர்சனம் செய்கிறான்

ஊரெங்கும் சாமியைத்
தூக்கிச் சுமந்தவன் — அந்த
உருவத்தைக் கும்பிடவில்லை.
உலகுக்கு ஆயிரம்
நீதிகள் சொன்னவன் — அவன்
உண்மையை நம்பிடவில்லை!

வணங்கும் போது கண்ணை மூடிக்
கைகளைக் கட்டு — தெய்வம்
வரத்தை எல்லாம் வாரி வாரிக்
கால்களில் கொட்டும்.

ஆணவத்தால் படுத்துக் கொண்டே
தலைவனைத் தொழுதால் — அந்த
ஆண்டவனும் உறங்கிக் கொண்டே
தண்டனை தருவான்.

நாட்டுக் கெல்லாம் உணவளித்தால் — அதைக்
கோவில் ஆக்கலாம்
நாள்முழுதும் உழைப்பவனே — ஒரு
தேவன் ஆகிறான்.

## பிறவிக் கவிதை

எட்டாம் பிறையிலே
எழில் மாடக் கூரையிலே...
தொட்டிலுக்குள் கண்ணுமகன்
தூங்கி முழிக்கயிலே
செம்பவள வாய்திறந்து
சிணுங்கி ஏன் அழுகின்ருன்?

தொட்டில் துணி முரடோ? இல்லை இவன்
தோளெலும்பும் பூதானே?
நித்திரையில் கூட
நிமிஷம் ஒரு வசந்தம்
பொக்கை வாய்ச் சிரிப்பில்
பூப்பூக்கும் வண்ணமுகம்
பச்சையுடல் நோகாமல்
பாலகனுர் விளையாடப்
பத்துவிரல் தொட்டில்
அத்தைமகள் கொண்டு வந்தாள்.

பூவுண்டோ தோப்பே
பொண்ணுமகன் கண்ணுறங்க
புகழுண்டோ புத்தகமே
பொடி நடைக்கு முன்தூவ?... நீ
பூந்தோப்பு மன்மதனே!

புகழ்மணக்கும் சண்பகமோ?
மன்மதனார் சாம்பலிலே
கண்விழித்த புண்ணியனோ?

சண்பகப்பூ வாடையிலே
சாய்ந்தாடி வந்தவனோ?
ஆரோ? எவரோ நீ
அடிவயிற்றுப் புதையலோ
மீசை குறும்புக்கு
மேலான பரிசொன்றைத்
தாய்மாமன் தந்ததுபோல்
தவழ்ந்தாட வந்தவனோ?

ஆசைக் கனவுக்கோர்
"அம்பாரம்" குவித்தது போல்
ஆத்தாள் முதுகில்
அடிமடியில் இருப்பாயோ? — உன்
உதையெல்லாம் ஒத்தடமோ?
உமிழ்நீர் இளநீரோ?
வாசல் மணக்கும்...

வழியெல்லாம் பூ உதிரும்! நீ
தாய்ப் பாலும் கண்ணீரும்
சாய்ந்தாடும் கவிநிழலோ?

## மக்கள் இலக்கியம்!

மலைமேல் இருந்த இயற்கை அழகுகளைப்
பார்க்கவிட்டுக்
கண்களில் அழகின் அழகை
விழிக்க வைத்தது.

அது ஒரு மலை ஊர்.
சூரிய வெளிச்சத்தைச்
சந்தையில் விற்றது.

அந்தப் பிரகாசத்தில் வேர்விட்டுப்
பிறந்த பொருள்களில்
ஒரு ரூபாய் மதிப்புள்ளவைகூட
நூறுரூபாய்க்கு விற்பனை செய்யப்பட்டன.

விடியலில்— ஒலித்த
பறவைப் பாடல்கள்
வானத்தின் கதவைத் திறந்து
மலையை நிர்வாணமாக்கின.
அதனால்—
கல்லுக்கும் பச்சை ஆடைகள்
கிடைத்தன.

ஹிப்பிகளும், தேன் நிலவைக் கொண்டாடும்
காதலர்களும்
மத குருக்களுக்கும்
வயதானவர்களும்
முகத்திற்கு அழகுதரும்
மௌனமான மலைக்காற்றைச்
சுவாசிக்க வந்தார்கள்.

நண்பகல் நேரத்தில்—
அந்த மலைப்பாதையில்
தரைத் தூசுகளும்
தங்கமயம் ஆயின.

மயங்க வைக்கும்
மலைக்காற்றின் ஊமைக் கவிதைகள்
மகாகவிகளின் விரல் வழியே உதிர்ந்து
மக்கள் இலக்கியங்களாக மலர்ந்தன.

ஓவியர்களின் கண்கள்
புகைப்படக் கருவியைவிட
வேகமாக
அந்தக் காட்சிகளைப் படம் பிடித்தன.

அப்போது அவர்கள்
திரைச் சீலைகளில் எழுதிய சித்திரங்கள்
மறுபடியும் ரவிவர்மாவின்

கல்லறை உறக்கத்தைக் கலைத்துக்
கலை உலகத்திற்கு அழைத்து வந்தன.

'ரயில்' வண்டி ஒன்று
பாம்புபோல ஊர்ந்து
மலையேறி வந்தது — காற்று
மகுடி வாசித்தது.

தேயிலைத் தோட்டம்
மொட்டு விட்டதும்
கூலிக்காரரான பூமியின் பிரும்மாக்கள்
கொழுந்துகளை எடுப்பார்கள்.

சூரியனைத் தொடத்துடிக்கும் மேகம் போன்ற
புகைமூட்டம் போடுவார்கள்!
சூரியாஸ்தமனம் வருகிறது.
ஆனாலும்
சோகம் வரவில்லை.

மறுபடியும் சூரியப் பார்வை
மலைமேலே விழும்
அதனால்— அங்கே மனிதக் குரல்கள்
பூமியில் இருந்து
வானத்திற்குப் போகின்றன.

# பாம்பு நாட்டியம்

"சுவரொட்டிகள்" விளம்பரத்தின
சொர்க்கமாகக் கண்களை மயக்குகின்றன.
மல்யுத்தம் செய்யப்போகும்
இரண்டு வீரர்களையும்
புகழ் பாடுகின்றன.

கர்வத்தின் எஜமானர்களைப் போலவரும்
பண்ணையார்கள்
சட்டைகளைத் திறந்தபடி
காற்று வாங்குகிறார்கள்.

கிராம மக்கள் ஊருக்கெல்லாம் இறகு முளைத்துப்
பறப்பதுபோல்,
வேடிக்கை பார்க்கும் ஆசையில்—
தெருவுக்குச் சுமையாக
வருகிறார்கள்.

மனிதர்களைப் போலவே
பறவைகளும்—
மரங்களைவிட்டு இடம் பெயர்ந்து
மண்ணில் தவழ்கின்றன!

கண் மூடிக்கொண்டு
உரத்த குரல்களில்
குருட்டு வாதம் செய்கின்றன.
ரசிகர்களின் பெருக்கத்தில்
மண்பரப்பு சிலுக்கிறது!

போட்டி மேடையில்—
முதலில் ஒருவன் கீழே விழுந்ததும்
தரையிலிருந்து கைதட்டல் வரும் முன்னால்
ஒரு பறவை சிறகடித்து
எகிறிக் குதிக்கிறது!

மனித முகங்கள்
பிரகாசம் கொள்கின்றன.
ரத்தத்தில் சூடு பரவி
மனக் குரங்கு குதியாட்டம் போடக்
குரல்களெல்லாம் ஆனந்தம் கொண்டாடும்.

அப்போது— யாரோ ஒரு
முகம் தெரியாத ஓவியனின் தூரிகை
குருஷேத்ரப் போர்க் களத்தைப்
படமாக எழுதிவிடக்
காற்றிலே வர்ணக் கோடுகள் போடும்!

மல்யுத்த வீரர்கள் — ஓடியாடி, விழுந்து புரண்டு
உடல்வலி கொள்ளும்போது—
குஞ்சுப் பறவைகூட
குறுகுறுக்கும் விழியிரண்டில்
கண்ணீர் இருப்பதையே மறந்துவிட்டுக்
காற்றைப்போல் குரலாலே சிரிக்கும்.

கடைசியில்—
வெற்றி பெற்றவன்
பரிசு பெறுவதைக்கூட பார்க்காமல்
''பாம்பு நாட்டியம்'' நடக்கப் போகிறது என்று
அறிவிப்பு வந்ததைப்போல்
அனைவருமே கலைந்து சென்றார்!

பணம் கொடுத்துவிட்டு—
நிழல் யுத்தம் நடக்கும்
திரைப் படத்தைப் பார்ப்பதற்கு
இரவெல்லாம் விழித்திருந்தார்.
ஒரு வசந்தத்தை உதிர வைத்துக்
காகிதப்பூ வளர்வதற்கு
ஆயிரம்பேர் உரமிட்டார்!

## சரித்திரக் கர்ப்பம்

அம்மா!
இருட்டுக்குள் புதைந்துவிட்ட
உனது பழைய பொற்காலம்
ஒரு புதிய விடியலில்
மீண்டும் வராதா?

வேண்டாம்!
நீ சரித்திரக்
கர்ப்பம் சுமந்து
ஒரு புதிய பொற்காலத்தை
உருவாக்கு!

சந்திரனைக் கும்பிட்டவர்கள்
சந்திர மண்டலத்தில் கால் பதித்து வந்த
மனிதர்களுக்கு
மாலை போடும்போது—

இனிமேல் இங்குவரும்
எந்தப் படைப்பிற்கும்
புதிய முகம் வேண்டாமா?

குழந்தைக்கு முத்தமிட்டுத்
தாலாட்டக் கட்டிய தொட்டிலுக்கு—
'தாடிக்' கிழவனை அனுப்பி விடாதே!

எங்கள் பூமி—
பாலைவனம் ஆகிவிட்டது.
மணல்கள் பூத்துச் சிரித்துப்
பூந்தோட்டம் ஆகுமா?

எங்கள் புன்னகைகளை
விதைத்துவிட்டுப்
பிணமான பின்னால்—
இந்தப் பாலைவனம் பூக்குமென்றால்
என்னை முதலிலே
கல்லறைக்கு அனுப்பு.

ஏழைகள்
கண்ணீரில் குளிக்கும் வரை — நான்
கங்கை நதியில் குளிக்க மாட்டேன்.

இத்தனை ஜீவநதிகள் பாய்ந்த பிறகும்
எங்கள் பூமி காயும் போது—
இமயமலை கூட எதற்கு?

இந்த தேசத்தையே அழிக்கும் ஒரு எரிமலை வேண்டும்.
எவரெஸ்ட் சிகரத்தின் பனிக்கட்டியைவிட
யாரோ ஒரு அனாதைச் சிறுவன் சுவைக்கும்
'ஐஸ்' கட்டி புனிதமானதல்லவா?

வீதியிலே விளக்குகள் எரிகின்றன;
வீட்டிலே அடுப்புகள்
எரிவது எப்போது?

மலர்க் காடுகளில்
மயில்களின் சிம்மாசனம்.
பணக்காரர்களுக்கு
மலர்க்கிரீடம்!

பசிகாரர்களுக்குச்
சுடுகாடுதான்
விருந்து வைக்க வேண்டுமா?

எங்களை அழவைத்துவிட்டு
நீ ஏன் அழுகிறாய்?
வெறும் அழுகை எதற்கு?
அதைவிட உன் கண்கள்
குருடாகப் போய் விடலாம்.

எதிர்காலம் யாருக்கும் தெரியாமல் — வெறும்
உருவம் வளர்த்து
உயிர் பெற முடியாமல்
எங்கேயோ இருக்கிறது!

இனிப்பான பொய்கள் முகங்கள்
யாருக்கும் தெரியாத விடுகதைகள்
தரிசு நிலம் விவசாயியைத் தேடித் தவிக்கிறது.
தங்கநிறத் தானியம்
விதைக்குள்ளே உறங்குகிறது!
தாயின் மணிக் கொடி மட்டும்
விழாக்களிலே பறக்கிறது.

கோவிலுக்குப் பொங்கல் வைக்கும் முதலாளிகள்
குடிசைக்குப் பொங்கல் வைக்க வேண்டும்!
பிறகு—
கோவிலும் வேண்டாம்!
குடிசையும் வேண்டாம்!

எல்லோருக்கும் ஒரே அளவில்
குடியிருப்பு வேண்டும்! — உலகம்
எல்லாமே தாய் நாடென்று
கொடிபிடிக்க வேண்டும்!

## "அவளின் மறுநாள்"

அவன் — மறுநாளில்
வருவதாய்ச் சொல்லி,
விடைபெற்றுப் போனான் — நான்
வாசலிலும், வீட்டிலும்
"மறுநாள்! மறுநாள்!" என்று
அழுத விழியால்
எழுதி எழுதி இளைத்தேன்!

விடியல் வந்தது! — "அவன்
வந்தானா?" என்றென்னை
விசாரணை செய்தது.
"என்று வரும் உன் மறுநாள்?"
என்று எல்லோரும் என்னை
ஏளனம் செய்தனர்!

இதயத்திலே அந்த "மறுநாள்"
இன்னும் இருக்குதடி
என் வண்ணக் கிளியே!

அந்த—
இதயத்தைத் திருடிய
இரண்டு விழிகள்—

என்னைப் பூவாக்கித்
தேன்எடுத்த இதழ்கள்
பனித்துளிபோல்
தொட்ட கரங்கள்—
வீக்கமான என் தேக்கு மர உடலைத்
தூக்கி ஆட வந்த
வீமராஜன் அந்த வீரன்!

அடையாளம் சொல்லிவிட்டேன் தோழி!
அவன்— என் பூமுகம்—
அடைய முடியாத தேனீ!

## கர்ண பரம்பரைக் கதை

உலகத்தில் முதல் முதலில்
இமயத்தின் உச்சியிலே
ஒன்பது மனிதர்கள் — சிவ
லிங்கமாய் முளைத்தார்கள்.

காமதேனு பால்கொடுக்க –
கால் முளைத்துக்
கை முளைத்துக்
கண் திறந்து
பூமியெங்கும் நடந்தார்கள்.

பெண்களெல்லாம் காதலித்த
கண்ணனே பெண் கொடுத்தான்.
மண்ணெல்லாம் மனிதகுலம் மலர,
மகத்தான சரித்திரத்தைப்
படைத்தார்கள்.

அவர்களது பரம்பரையில்—
அழகி ஒருத்தி பிறந்தாள்!
அவளுடைய
காலடிச் சுவடுகளின் கீழே—
எத்தனையோ வாலிபரின்
இதயங்கள் கசங்கியது!

தாயின்
ரத்தத்தில்
பத்துமாதம் குளித்துவிட்டு,
உலகத்தின்
மொத்தச் சிவப்பை எல்லாம்
குத்தகைக்கு எடுத்தநிறம்!
சித்திரப்பூ
தெருவழியே ஒருநாள்
வந்தாள்!

அப்போது—
பல்லக்கிலே ஏறி,
பவனிவந்த மன்னன்,
பல்லக்குத் தூக்கிகள் போல்
பருவத்தின்
தலைநகரைச் சுமக்க—
பெண்கேட்டுப் போனான்.

அவளைப்
பெற்றவரை, உறவினரைப்
பிரியமாய் அழைத்துவந்து,
பெரிய விருந்து வைத்தான்.

இலைபோடும் முன்னாலே—
செம்பவளச் சக்கையைப்போல்

வெற்றிலையை மென்றுவிட்டு,
செம்பிலே நீரெடுத்து—

முற்றத்திலே வாய் கொப்புளிக்கப்
போன ஒரு மூதாட்டி—
கூடைகளில் மறைந்திருந்த
மாட்டுத் தலையைப்
பார்த்துவிட்டாள்!
காதுக்குக் காது— குரல் பரவ
விருந்துக்கு வந்தவர்கள்
வீதியெல்லாம் தலைதெறிக்க
விழிவழியில் ஓடினர்.

அரசனது படைவீரர்
அவர்களைப் பிடித்துவரக்
காற்றாக ஓடி வந்தார்.
அந்த வழியாக—
ஆறு ஒன்று ஓடியது.

அரசனுக்குப் பெண் கொடுக்க
மறுத்தவர்கள்—
ஆற்றைத் தொழுதார்கள்.
அக்கரையில் புன்னைமரம்;
அடர்ந்து வளர்ந்த கோரைப் புல்!

அன்னையே! கங்காதேவி! நாங்கள்
அக்கரைக்குப் போவதற்கு—
கோரைப்புல் பாயாக வேண்டும்— நீ
கொழுந்துவிடும் புன்னை மரத்தால்
பாலம் போட வேண்டும்

ஆசைகள் நிறைவேறினால்
அர்த்த ஜாமத்தில் திரும்பி வந்து—
கழுத்தளவு நீரில் நின்றுகொண்டு— எங்கள்
தலைவன் தன் தலையை வெட்டி— உனது
அலைமேல் எறிவான் என்றார்.
கங்கை அன்னை
கைகொடுத்தாள்!
தலைப்பலி தரவேண்டாம்— நீங்கள்
தர்மத்தின் வழிநடப்பீர்! என்றாள்.

கண்மூடித் திறப்பதற்குள்,
அரண்மனையை விட்டுப்
புறப்பட்ட அவசரத்தில்,
கட்டழகி ஒருத்தி
தொட்டிலிலே கண்மூடித்
தூங்கும் குழந்தையைத்
தூக்காமல் வந்துவிட்டாள்!
நினைவுகள் திரும்பிவர
நீர்வீழ்ச்சிபோல் அழுதாள்.

உட்கார்ந்து திரிக்கும் கயிற்றை,
உயரத்தில் கட்டி— சின்னச் சுமைதாங்க,
இருபுறமும் குழிக்குள் மூங்கிலை நட்டு—
அதன்மேல் நடந்து,
தரைமேல் விழாமல்
பறை கொட்டிப் பாடி, ஆடிப்
பணம் தேடி—
பசிதீர்க்கும் வித்தைகற்ற
கலைஉலக நாடோடி—
"கழைக் கூத்தாடி" ஒருவன் வந்தான்.

அவனிடத்தில்—
அரண்மனையில் இருக்கும்
தொட்டில் குழந்தையைத்
தோள்மீது கொண்டு வந்தால், — உன்
தோழர்களின் பசி தீர்ப்போம்
தோள் கொடுப்போம் காலமெல்லாம் என்றார்.

அவன்—
அரசனிடம் போய்
அந்தரத்தில் ஆடிப்
பார்த்தவரை மயங்க வைத்தான்.
பரிசென்ன வேண்டும் என்றான்
பட்டத்து ராஜா!

திருமணம் முடிந்து,
எட்டு ஆண்டுகளாய்
எனக்குக் குழந்தையில்லை — அந்தத்
தொட்டிலிலே தூங்கும்
குழந்தையைக் கொடுத்தால் — எங்கள்
குலமெல்லாம் கண்திறக்கும் என்றான்.

ஒன்பதுபேர் முன்னால் வந்து — அந்தப்
பொன்சிலையைத் தாயிடம் தந்தான்.

அவனை இறுகத் தழுவினர்!
ஆண்டுக்கு இரண்டுமுறை
எங்கள் ஊருக்கெல்லாம் வரவேண்டும்
உணவும், பரிசும் பெறவேண்டும்!
உன் குலம் உள்ளவரை — எங்கள்
உறவினர்கள் நீங்கள் என்றார்.

அவன் குலமெல்லாம்—
அன்றொரு நாள் நாடுகளை எல்லாம்
அவர்களது தாய் நாடாக்கிக் கொண்ட
அனாதை 'எபிரேய' மக்களைப் போல்
சந்தித்த ஊரை எல்லாம்
சொந்த ஊராக்கிக் கொண்ட
ஏழைகளின் கூட்டம்.

அறுவடைக் காலத்தில்—
தலைப்பாகை கட்டி,
தலைமேலே,
தர்மதுரை யாரோ ஒருவன் கொடுத்த
வெண்கல வட்டப் பதக்கம் வைத்து,
ஒன்பதுபேர் குடும்பங்கள்
உயிர் வாழும்
ஊர்களுக்கு வருவார்கள்!

வட்டியிலே சோறுபோட
வறுமைப் பசி தீர்த்துச்
சிரிப்பார்கள்!
அதற்குப்பின்— அவர்காத்த குடும்பத்தார்
சிலபேருக்கு
ஒன்பது காசுகள் தருவார்கள்.
இன்னும் சிலர்
இரண்டணாவைப் பெறுவார்கள்!

இது 'பிச்சை' வழக்கமில்லை!
என்றோ நடந்த
நன்றிச் சிறுகதையை
என்றும் தொடர்கதையாய்
நினைவூட்டும்—
இரண்டு மனிதப் பிரிவுகளின்
இதய உறவுகள்!

கழைக் கூத்தாடிகளில் சிலர்—
கால ஓட்டத்தில்,
வயல் வாங்கி, வீடுகட்டி
வாழ்கின்ருர்.

ஆனுலும்,
அறுவடைக் காலத்தில்
அவர்கள் வருவார்கள்!
ஆக்கிவைத்த சோறு தின்று
அன்பின் அடையாளச் சின்னம்போல்
ஆதியிலே பெற்ற பரிசுக்குப் — புகழ்
அலங்காரம் செய்வார்கள்!
ஒன்பதுபேர் குலம் தழைக்க—
அவரிருக்கும்,
ஊர் சென்று
வாழ்த்துவார்கள்.

சிந்தனைக்குப் பொருந்தாமல்
வந்த புராணம்தான்—
கர்ணபரம்பரைக்
கதை இதுதான்— என்ருலும்
சிலபேரைக்
கர்ணனை மாற்றியதால்— இந்தக்
கதையை வணங்குகிறேன்!

[கம்பம் பள்ளத்தாக்கில் எங்கிருந்தோ வந்து குடியேறித் தமிழர்களாகவே வாழும் உழைப்பாளி களின் சுயமரியாதையை அறிமுகப்படுத்த ஊர்ச் சாவடிகளில் சொல்லப்படும் கதைதான் இது. இதில் வரும் நாடோடிக் கலைஞனை கழைக் கூத்தாடியின் மனிதாபிமானம் நம் நெஞ்சைப் பிழிகிறது. இன்னும் இந்தப் பழம் உறவு அந்த மண்ணில் உருவம் சிதையாமல் காப்பாற்றப்பட்டு வருகிறது.

'நன்றி உணர்ச்சி' என்பது சம்பவமாகக் கூட முகம் காட்டாத யந்திரயுகத்தில் — அது ஒரு சரித்திரமாகவே வாழும் பூமி புனிதமானதல்லவா?]

# நகரம்

நாகரிக தீபம் ஏந்திய நகரம்
விஷப்புகை கக்குகிறது.
ஒவ்வொரு இதயத்திற்குள்ளும் மிருகங்கள்.
உதடுகள் ரத்தம் குடிக்கின்றன.
ரோஜாவைத் தின்னும் கவிஞர்கள்.
வீணையால் அடுப்பெரிக்கும் பாடகர்கள்.

சமுதாய உயர்வுக்குப் 'பாடுபட்டு'
அலுத்துப்போய்—
சம்பள உயர்வுக்குப் போராடும்
அலுவலகங்கள்
இந்தியாவின் ஜனாதிபதிபோல்
சம்பளம் வாங்கி
இந்தியாவைப்போல் கடன் வாங்கும்
ஆடம்பரத்தின்
அவசரக் கோலங்கள்

கடவுளின் கல்சிலைகளை உடைத்துவிட்டுக்
கல்லுடைக்கும் தொழிலாளியை
உதைக்கும் ஞானிகள்
நகரத்தில் ஊர்வலம் நடப்பதுண்டு.
ஆனால், நாள்தோறும்—இந்த
நகரமே ஊர்வலத்தில் நடக்கிறது!

## போருக்குப் பிறகும்

சமாதான விவாதத்தில்கூட
எதிர்காலப் போரின் குரல்
கேட்கிறது!

துப்பாக்கிச் சப்தத்தால்
சுவர்களுக்குக் கூட
காது முளைத்துவிட்டது!

இனிமேலாவது—
ஆகாய விமானம்
பதுக்கல்காரர்களின் சாம்பலை
வயல்களில் தூவினால்தான்
'பசுமைப்புரட்சி' ஏற்படும்.

வேகமாக சந்திர மண்டலத்திற்கு
ஏவுகணைகளை அனுப்பிவிட்டு
அதைவிட வேகமாகத்
தூக்கமாத்திரைகளைத் தேடும்
அமைதியற்ற வாழ்க்கை!

'தேன் நிலவில்' வரும் காதலர்களின்
சிரிப்பில்கூட
'தேசத் துரோகம்' மறைந்து இருக்கிறதா
எனத் தேடும் நாடுகள்.

ஐக்கிய நாட்டுச் சபை
போரை எதிர்த்தால்
அதன்மீது கூட அணுகுண்டு
வீசும் அதிகார வெறி

சரித்திரத்தில்—போர்கள் முடிந்துவிட்டன.
ஆனல்—
சமாதான விவாதத்தில் கூட
எதிர்காலப் போரின்
குரல் கேட்கிறது.

# நடைபாதை

பூமரக் காட்டிலே பொன்வண்டு பாடுது!
பொன் அந்தி மாலையும் பூமழை தூவுது!
வானிலே சூரியன், பூமியில் வேர்வைகள்
வயல்வெளி எங்குமே வாழ்க்கையின் நாடகம்.

பாடுவார் பாடவும், ஆடுவார் ஆடவும்
பரமனே தூங்குகின்றார்.
பக்தர்கள் பூஜையில், பவித்திர வேளையில்
வரங்களைத் தேடுகின்றார்!

மூடுவோர் கண்களில் ஆயிரம் நாடகம்!
முழுவதும் சுயநலம்!
கோடியாய் மானிடர் வீதியில் வாழலாமா?
கோவில்கள் தேவைதானா?

நடைபாதை மீது பலர் தூங்குகின்றார்!
சிலைமீது அங்கே மலர் தூவுகின்றார்!!

## கூலிக்காரி!

சூரிய காந்திப் பூவைப் போலக்
கதிர் கிடந்தது—வானில்
சோம்பலோடு வெயிலடிக்கத்
தூறல் சிந்துது!

'அத்தக் கூலி' வேலை செய்ய
அணி வகுத்தவள்—கால்கள்
அட்டையோடு ஒட்ட ரத்த
தானம் செய்தவள்.

கண் அழுது ஓய்ந்தபின்னுல்
விண் அழுதது—இவள்
கந்தல் பாயில் காம தேவன்
கணை விழுந்தது!

பந்தல் போடும் நீல வானம்—மழைக்
குளிர் கொடுத்தது—இந்தப்
பாவை மீது சேலை வந்து,
குடை பிடித்தது!

ஊரில் சிந்தும் சாரலோடு
ஒட்டும் மேனிக் கட்டும் ஏங்குது!

ஓடி வாடி! செல்லக்குட்டி
ஓவியம் போலிருக்கும்
உனக்கிருக்கு வேலை வெட்டி!

மேகங்களே வந்து பாருங்களே—இந்த
தேவதை ஆடையின் ஈரங்களை!
ஓவிய மேனி கரைகிறது—விழி
ஒவ்வொன்றும் ஓர்குடம் ஆகிறது.

குளுகுளுவென மழைத்துளி
வந்து விழுகுது!
அழு! அழு! எனச் சொல்லி
ஆணவக் கெக்கலி கொட்டுது—இவள்
ஆறடி மண்ணைத் தேடும்வரை—ஒரு
ஆறுதல் கூறிட யாருமில்லை!

## ஓ.. எங்கள் சூரிய புஷ்பமே!

எங்கள் சூரிய புஷ்பமே!
நீ ஏன் பூமியில் மலர்ந்தாய்?
எதிரிகள் — நம் இரண்டாவது வசந்தத்தைப்
'பாலைவனப் பசுஞ்சோலை' என்று
சொன்னார்கள்.

அதனால்தான் — நீ
பாலைவனத்தின் வெப்பக்
காற்றுக் கடலில்
முதல் முத்தாக முளைத்த
'மொட்டு' என்று கவிகள் சொல்கிறார்கள்.

ரோஜாப் பூவைச் சூடியவர்கள்
சரித்திரத்தில் உண்டு.
ஆனால் — சரித்திரமே
சூடப் போகும்
முதல் ரோஜா நீதான்.

மன்மதன் — மலர் அம்புகளை வீசியதால்
நீ பிறந்ததாகச் சொன்னார்கள்.
இதைவிட வேறு என்ன பொய்
இருக்கிறது?

புதிய யுகத்தைக்
காமத்தீயில்
எரிக்க வரும்
எதிரிகளைச் சாம்பலாக்கும்
"நெருப்பு அம்பு" அல்லவா நீ?

ஒரு மேனகையின்
கர்ப்பத்தில் இருக்கும்
பெயரில்லாத பிள்ளையே!
நீதான் — ஏழைகளின் பெயரை
மாளிகைகள் தலைவணங்கும்படி
உரத்த குரலில் உச்சரிக்கப் போகிறாய்!

'உதய சூரியன்' உனக்கு
வானவில்லைக்
கிரீடமாகச் சூட்டுவான்

அவன்தான் — இமயமலைப் பனியை
எத்தனையோ ஜீவ நதிகளாக
ஓடவிடப் போகிறான்!

[சரித்திரம் விசித்திரமானது! சில தலைவர்கள் இருண்ட காலத்தில் வாழும்போது அவர்களது வசந்த காலத்தை அறிமுகப்படுத்தச் சில மலர்கள் பூக்கின்றன. எல்லாக் காலங்களிலும் சரித்திரத்தில் சோதனைகளைக் கடந்து வெற்றி பெற்ற—முகங்களை வாழ்த்தும் உருவகக் கவிதை இது.]

## ஆயுளில் பாதி

சோலையில் வந்தது, வண்டொரு
சொப்பன ராகத்தைப் பாடி — மௌன
சொர்க்கத்தில் ஒருமுறை ஆடி!

முகம்தரும் மனக்குகை ஓவியம்
சுகம்தரும் ராத்திரி நேரம்! — இதழ்ச்
சுவைபெறும் தேன்துளி ஈரம்.

ஆடையில், மன்மத மேடையில்
ஆடிய நாடகக் கோலம் — அதில்
ஆயிரம் இந்திர ஜாலம்.

"யாரது?" என்றவள் போரிடும்
ஊடலில் மேனகைக் கோலம் — வெறி
ஊறிய தாகத்தின் தாகம்.

கைவளை கொண்டவள் சிந்திய
கவிதைகள் காதினில் மோதி — வரும்
கனவுகள் காதலின் நீதி!

தாமரைக் கோவிலைத் தழுவிய கங்கையின்
நீரலைபோல் விளையாடி —
சந்திரன் வந்ததும்
அந்தியில்
அவளுடன் உறவு கொண்டாடி,
அணைத்ததும், சிரித்ததும் — என்
ஆயுளிலே ஒரு பாதி!

## வெள்ளை, வெள்ளைச் சேலைக்காரி!

பொட்டுமேலே பொட்டுவச்சு
பொட்டலிலே போற புள்ளே!
பொட்டலிலே பேஞ்ச மழை — ஓம்
பொட்டைக் கூட நனைக்கலையே!

உள்ளான் உழவடிக்க
ஊர்க்குருவி நாத்தரிக்க—
நாரை பரம்படிக்க,
நட்டுவாடி கட்டப் புள்ளே!

இருட்டை இருட்டடிக்க
இந்திரனைப் பேயடிக்க
பாறை எடஞ்சலிலே
பார்த்தேனே உன் முகத்தை!

வெள்ளை! வெள்ளைச் சேலைக்காரி!
வெள்ளரிக்காய் கூடைக்காரி!
கோணல் மாணல் வெள்ளரிக்காய்
கொண்டுவாடி தின்னுப் பாப்போம்.

அஞ்சு புளியமரம்!
அதையடுத்துச் சோளக்காடு!
நெஞ்சு கரையிறேனே!
எஞ்சமத்துப் புரியலையோ?

## அழகி!

ஆற்றங்கரையோரம் ஆடித் திருநாளாம்!
ஆடித் திருநாளில், கூடுதுறை ஆற்றில்—
நிழல்பந்தல் போட்டதுபோல்
நின்றிருக்கும் புளியந்தோப்பில்—
சுகமான வெண்மணலில்,
விழிமூடும் கற்பனைகள்!

பைய நடந்து பருவத்தேர் அசைந்துவந்து
மையல் எழுதுகிற மாலையிலே, காலார—
நாம் நடந்தால்—
ஊருக்கு வெளிப்புறத்தில், முன்னிடத்தில்—
மரித்துப் பிறந்தாலும்
மனங்களிலே ஆடிவரும்—
அழகு யுவராணி!

ஆசைகளின் பூந்தோட்டம்!
பழகும் உயிர்க்கவிதை!
பாதிவழி போகையிலே—
மண் சுவர்த்
தென்னந் தோப்பு வீட்டின்
முன்புறத்தில்—
மதகுநீர் விழுந்து, மகுடிபோல் இசைபாடி

அருவியாய்ச் சிரித்துப்பின்,
ஆடி, விளையாடி
கரையோரம் ஓடுகிற
கண்கவரும் காட்சியிலே
பின்னிரவின் வெண்ணிலவுப்
பிறை அழகைப் பார்த்தபடி,
தன்னழகில் தான் மயங்கும்
பெண்ணழகி இருக்கின்றாள்!

## நானும் ஒரு புயல் காற்று.

என் இதயத்தில் வீசும் புயல்
வானத்தை அழவைக்கிறது.

"இருட்டிலும் ஆயிரம் தீபங்கள்
ஏந்தும் வானமே!
எங்கள் பூமியில் பகலிலும்
எத்தனை இருட்டறைகள்?"
என்ற கேள்வி அதை
நடுங்க வைக்கிறது.

ஒவ்வொரு ஏழைப் பெண்ணுக்கும்
நட்சத்திரப் பொட்டுவைக்க
சபதம் ஏற்கிறது.

இனிமேலே—உங்கள்
வீடெல்லாம் விளக்கெரிந்தால்தான்
என் சிம்மாசனத்தில் வெண்ணிலவு
சிரிக்கும் என்கிறது.
நான் சூரியன் மறைந்தபோது—ஒரு
மேற்குமலை ஊரிலே
பிறந்தேன்.

ஆனல்—இன்று பூமியின்
நூறுகோடி சூரியப் பிரகாசமாக
அடிமை இருட்டை அழிக்கிறேன்!
எனது குரலின் ஓசையில்
இடிஓசை மௌனமானது.

எனது—பெருமூச்சு
புயலான பிறகுதான்
சமதர்மத் தென்றல் வீசுகிறது!

## புதிய விடியலின் வாசலில்

பொய்களுக்குத் தலைமை தாங்கும்
அடிமைகளே! வாருங்கள்.
உங்கள் பலத்தையே உரமாக்கி
உண்மை பூத்துவிட்டது!

சந்தர்ப்பவாத உறையில்லாத
சத்தியப் போர்வாள்
உங்களைத் தேடுகிறது!

அது நீதியின் வெளிச்சம்
இருளில் வீசுவதைப்போல்
போர்க்களத்தில் விளையாடும்.
பூமியில் உறங்கிய கற்பனைத்
தெய்வங்களின் சிலைகள்கூட
புதுயுகம் காணப் போராடும் உண்மை
மனிதர்களாக
விழித்தெழுந்து விட்டன.

"ஞான கர்வம் சுயநலம்
உழைப்பின் கர்வம் பொதுநலம்"
என்பதற்குச்
சாட்சி சொல்லப் போகின்றன.

அந்தச் சிலைகள் விழிப்பில்
மனிதன்
தன்னம்பிக்கைக் கொடியை
ஏற்றுகிறான்!

புதிய விடியலின்
வாசலில் அது பறக்கிறது!
வானத்துச் சூரியனின்
வெப்பத்தை
அதிகமாக்கும்
விடுதலைக் காற்றினை வீசுகிறது!

அதனால் — சூரிய வெளிச்சம்
பூமியில் பட்டு
மனித ரத்தத்தில் சூடாகப்
பரவுகிறது!
சுதந்திரம் ஆனந்தக் கூத்தாடுகிறது!

## "திறப்பு விழா!"

சர்வாதிகாரம்
மனிதனை நாடு கடத்துகிறது.
சமத்துவம் —
மனித பேதங்களை
நாடு கடத்துகிறது!

எந்த மதத்தைப் பின்பற்றினும்
எந்தப் புத்தகத்தைச் சுமந்தாலும்
எந்த இலக்கியத்தைப் படைத்தாலும்
எந்த நாட்டில் பிறந்தாலும் — நாம்
எல்லோரும் மனிதர்கள் தான்!
முதல் முதலாக இந்த உண்மையை — உங்கள்
மூளைக்கு அறிவித்தது சமத்துவமே!

உங்கள் மனதிற்குள்
எத்தனை வேதங்களையும், ஞானங்களையும்
மூடி வைத்திருந்தாலும் —
ஆத்மாவின் நூல்நிலையத்திற்குத்
'திறப்பு விழா' நடத்துங்கள்.
அங்கே உள்ள புத்தகங்களின்
வாசகங்களைப் படியுங்கள்!

இதுவரை நீங்கள் —
தெய்வங்களை வணங்கினாலும்,
தீர்க்கதரிசிகளாக இருந்தாலும் —
இனிமேலே — உங்கள் இதயத்தில்
மனிதனுக்குக் கோவில் கட்டுங்கள்!

## குருவிகள்

கொண்டையிட்டுக் கொண்டு, காற்றில்
நின்றிருக்கும் சோளத் தோட்டம் ஆடுது — அதில்
சண்டையிட்டுக் கொண்டு காதல்
சரசமாடும் குருவிக் கூட்டம் ஓடுது!

பச்சை வண்ணத் திண்ணையாகிப்
பாய்விரிக்கும் வரப்புகள்
கண்ணில் ஆடும்
வண்ண வண்ணச் சிறகுகள்
காற்றில் ஆடும்
தென்னந் தோப்பின் அசைவுகள்!

குதிரை வேலிக் கூட்டம்
கூத்தில் ஆடும் தோட்டம்
குடிக்கும் நீரை, அழுக்கு மண்ணில்
குடம் குடமாய் ஊற்றி—
கொடிக்கு பாரமாகக்
கொஞ்ச காலம் இருந்து,
கடும் வெயிலில் துடிப்பவர்கள்
கடிப்பதற்குக்
கையில் வந்தது வெள்ளரிப் பிஞ்சு!

பவளக் காடு, தோகை கட்டி
உயரமாக இருப்பதுபோல்
“இருங்குச் சோளம்” சிரிக்குது — அங்குக்
குருவிக் கூட்டம் பறக்குது.

## சர்வாதிகாரி!

அவன் மனது—
ஆகாயத்தையே சிம்மாசனமாக்கிச்
சூரியனைப் போல் — பூமியை
ஆள்வதாக நினைக்கிறது.
அவன் மடியிலே வெண்ணிலவு!

அவன் நட்சத்திரங்கள்
வட்டமிடும்
புதிய சூரியன்.
ராணியையும், அடிமைகளையும்
பார்க்கும் போது
இப்படி ஒரு கற்பனை.

''அவன் சூரிய வம்சமல்ல.
சூரியன் தான் அவனது
வம்சா வழியில் பிறந்து
வானத்திற்குப் போனவன்.''
இது கூட அவனது கர்வத்திற்குக்
கடைசி உதாரணம்தான்.

அடிமைகளை அவன்
கல்லறைக்கு அனுப்புவான்.

அப்போது அவன்—
அவர்களைக் காற்றைச்
சுதந்திரமாகச் சுவாசிக்கும்
ஆயிரம் ஜன்னல்களைக் கொண்ட
"பாதாள மாளிகைக்கு"
அனுப்பியதாகச் சொல்வான்.

அந்தப்புரத்தில் பல பெண்களை
அவன் காதலிப்பான்.
ஆனால் அங்கே ராணி வந்ததும்
அவளை நடுவில் உட்கார வைப்பான்.

"இந்த இலைகளுக்கு நடுவே
நீ ஒரு பிரகாசமான மலர்" என்பான்.
ஒரு மலர் உதிர்ந்தபின்
மற்றொன்று பூக்கும் என்று
உணராத ராணி மலர்போல் சிரிப்பாள்.

அவன்—நீண்ட நேரம்
அத்தாணி மண்டபத்தில் அமர்ந்தால்,
அவள் மின்விசிறியை சுழல வைப்பாள்.
அவன் உடனே "பருவக்காற்று
வீசுகிறது" என்பான்.

காற்றிலே வாசனைத் திரவியங்களின் மணம்
மிதந்து வந்தாலும்
"கண்ணே! உன் உதடுகளால்
காற்றும் மணக்கிறது" என்று
கவிபாடுவான்.

போர்க்காலங்களில்—
அவன்—தனது கூடாரத்திற்கு—
பீங்கான் கோப்பைகளில்
மதுவருந்தப் போவான்.
அப்போது—கல்லறைக்கு அனுப்பப்படாத
அடிமைகள்
சுடுகாட்டுக் காவலாளிகள்போல்
ஒருவரை ஒருவர் கண்காணித்துக்கொண்டு
அமைதியாக இருக்கவேண்டும் என ஆணையிடுவான்.

# ஐயோ! பகுத்தறிவே!

[மூடபக்தியைப் போலவே, மூடநாத்திகமும் கண்மூடித்தனமான உணர்வுகளின் வெறியாட்டம் தான். இரண்டு தத்துவங்களும் சமுதாயத்திற்குப் பயன்பட்டால்—தத்துவங்களோடு முரண்படுகிற வர்கள் கூட —நடைமுறைகளோடு ஒத்துப் போவார்கள். பக்திப் போர்வையில் 'ரஸ்புடின்' நடத்திய காம விழாக்களைப்போல—பகுத்தறிவுப் போர்வையில் பல மனிதர்கள் சந்திக்கும் 'இரவு நேர தேவசபை'களின் கதை இது. நான் ஒரு நாத்திகன்; அதோடு ஒரு சமுதாய விமர்சகனும் கூட. எனவேதான் இந்தக் கவிதையை எழுதி னேன்.]

பட்டு வேட்டியும்
பச்சை வர்ணச் சட்டையும்,
பார்வைப்
படையும் கொண்டொரு
நடையழகன் வந்தான்.
இடதுபுறம் விழிக்கோணம் காட்டி—
இதழோரம் புன்னகை கொட்டி—
ஒரு
ஆண்தாசியைப் போல
அலங்காரம் செய்துகொண்டு
ஆகாயத்தில் பறப்பதுபோல்
அவன் நடந்தான்.

தெருக்கூத்திலே
திருக்கூத்து நடத்தும்
திருவாளன் அவன்.
'விதூஷகன்' குறும்பிலே,
விழுந்து விழுந்து சிரிக்கும்
ஜனங்களிடையே புகுந்து
சிநேகிதன் தோளிலே
கைபோட்ட படியே—ஒரு
சிற்றிடையாளை
எட்டி இருந்து
தொட்டுப் பிடித்துவிட்டு
எங்கேயோ ஓடி மறைவான்!
சொற்பிரளயச் சண்டமாருதம்—
சுகமான மந்த மாருதம்—எல்லாமே
அற்புதமாய் வலைவீசுதல் போலவே
'அடுக்குமொழிகள்' பேசுவான்!

சீர்திருத்தம் பேசிவிட்டுச்
சித்தாடை திருத்தும்
பாவாடைப் பெண்கள் முகம்பார்த்து—
அகநானூற்றுப் பாடலுக்கு
அர்த்த ராத்திரியில்
புதிய உரை எழுதுவான்.
சுற்றுலாப் போகும்போது—

தோழர்களின் மனைவிமார்கள்—நிலைமறந்து
தூங்கும் இரவுகளில்
ஒவ்வொரு உதட்டிலும்
'பிணமுத்தம்' தருவான்.
பலிஆடு போலவே மனைவியை
ஆக்கிவிட்ட
பலவீனமான மானிடன்.
பகுத்தறிவு பேசும் காமவெறியன்.
அவன்—'அமாவாசை' ஆனபிறகு
இரண்டாவது தேன்நிலவிற்காக
'அழகி' ஒருத்திக்கு
இருட்டில் மாலையிட்டான்.
ஐயோ! பகுத்தறிவே!!

## அனுதாபத் தீர்மானம்

மனதில் ஒருமுகம்
உதடுகளில் ஒருமுகம்—உங்கள்
'வார்த்தைகள்' மாறுவேஷம்
போடுகின்றன!

உங்கள் கண்களே
உமது முகத்தைக்
கண்ணாடியில் பார்க்கும்போது
தலைகுனிகின்றன.

வெறும் உறைகளோடு
போர் வீரர்களாகக்
காட்சிதரும் கோழைகளே!
முதல் வெற்றியுடன் திரும்பிவரும்
எங்கள் வாள்கள்—
உறைக்குள் போகாமல்
உங்களைத் தேடுகின்றன.

சரணாகதி அடையும்போதுகூடச்
சமர்ப்பணம் செய்ய
ஆயுதம் இல்லாத
காகிதப் புலிகளே!

ஆதிக்கப் பசியில்—
உடலுக்குள்
புல்லைத் திணித்துக்கொண்டு
ஜீரணிக்க முடியாமல்
திணறும்
உங்களுக்காக—

நாங்கள் கொண்டுவந்த
அனுதாபத் தீர்மானத்தை
உலகம்
ஏகமனதாக ஏற்றுக்கொண்டது!

ஆற்றங்கரை
அழகியே!
உன்! ஈரத் தலைமேலே
எத்தனை முத்துக்களோ? — அந்த
ஈரம் உலர்வதற்கு
சூரிய முத்தங்களோ?

*

உலகத்தின்
வணக்கங்களெல்லாம்
உறங்காமல் — உன்
காலடியில் கிடந்தன.
ஆனல் — உனது கண்களோ —
இன்று,
பூமிக்குள் புதைந்து
இமைகளை
மூடிக் கொண்டன.

*

வைரத்தை விறகாக்கி
மின்னல் நெருப்பு வைத்து
முத்துக்களை அரிசியாக்கும்
கற்பனவாதம் —
இலக்கியத்திற்கு

போதை ஏற்றலாம் — ஏழைகளின்
இலைகளுக்குச் சாதம் போடுமா?

*

வானத்திலே —
பகலுக்கு முற்றுப்
புள்ளி வைக்கும் நிலவு.
மறுபடியும் —
இரவை எரிக்க
நெற்றிக் கண் திறக்கும்
பகல்பூ!

*

திருமணத்திற்குப் பிறகு
இரண்டுபேர் ஒருவராய் மாறுகிறார்கள்.
அதற்குப் பிறகு —
அவர்கள் இரண்டுபேரும் சண்டை போடுகிறார்கள்.
ஏன்?
''அந்த ஒருவர்''
யார் என்று தீர்மானம் செய்வதற்காக!

*

அழகி ஒருத்தியின் இதயம்,
அவளைவிடப்
பத்து வயது குறைந்த

இளைஞனைக் காதலித்தாள்.
அனைவரும் கேலி செய்தார்.
அப்போது அவள் சொன்னாள் :—
"அன்னை வயிற்றிலிருந்து வந்தபிறகு
பகலும், இரவும் நான்
அவனுக்காகவே காத்திருந்தேன்.
அவன் பத்து வருடங்கள்
தாமதமாகப் பூமிக்கு வந்தால்
அதற்கு நான் என்ன செய்வது?"

*

"நாம் இருவர்,
நமக்கிருவர்!" என்பது
குடும்பக் கட்டுப்பாட்டின் கோஷம்.
ஆனால் —
உலகத்தில் ஜனத்தொகை
பெருகும் வேகம்
"உனக்கு நான்
எனக்கு நீ!" என்று
கட்டிலறை தேடாமல்
கணவனும் மனைவியும்,
காதலைப்
பெருமூச்சு விடுவதோடு
'கட்டுப்பாடு' செய்து கொள்கிறார்கள்!

*

வெளிநாட்டில் இருந்து வந்து
தமிழுக்குத் தொண்டு செய்த
"போப்பையர்" பற்றிப்
பேராசிரியர் பாடம் நடத்தினுர்.
கல்லறையில் கூடத் "தமிழ் மாணவன்" என்று
தன் பெயரை எழுதச் சொன்ன,
கதையைச் சொல்லிக்
கண்ணீர் விட்டர்!
ஒரு குறும்புக்கார மாணவன்
உடனே கேட்டான் —
"ஐயா! அவர் தமிழ் மாணவர் என்ருல்
வகுப்பறையிலேயே தூங்கலாமே?"

*

ஒரு தலைவரின் மேடைப்பேச்சு
ரசிகர் சொன்னுர்—
"உங்கள் கூட்டங்களில்
ஒன்றைக்கூட நான் 'மிஸ்' செய்ததில்லை!"
அவர் சொன்னுர்:—
"நன்றி! ஆனுல்
மிகுதியான கூட்டங்களை
'மிஸ்' செய்த
தமிழ்ப் பேச்சாளன் நான்தான்!"

*

பழம்பெருமை பேசியே
பழக்கப்பட்ட
ஒருவன் சொன்னான்:—
“எங்கள்
தாத்தா திவானாக இருந்தார்!
தந்தை ஜமீன்தாராக இருந்தார்.
தயவுசெய்து—
எனக்கு ‘டீ’ சாப்பிட
பத்துப் பைசா கொடுங்கள்!”

*

நமது நாட்டுச் சோசலிஸ்டுகள்
விசித்திரமானவர்கள்.
உழைப்பவனுக்கே நிலம் சொந்தம்
வசூலிப்பவனுக்கே
உண்டியல் சொந்தம் என்று
‘உரிமைப்போர்’ நடத்துவார்கள்!

*

கல்லூரி விடுதியில்
சாப்பிட்டபோது ஒருவன்
“சாதத்திலே சக்கரவர்த்தி
இருக்கிறார்” என்று
சப்தம் போட்டான்.
வாழை இலையில் தேடிப் பார்த்தோம்.

சோற்றிலே "பீடிச்சக்கரவர்த்தி"
"சொக்லால் ராம்சேட்பீடி"
துண்டொன்று கிடந்தது!

*

தாசியின் வீட்டுமாடி
காலியாக இருந்தது.
"இது வாடகைக்கு விடப்படும்"
என்ற அறிவிப்புப்பலகை தொங்கியது.
ஒரு கவிஞன் அந்தப்
பலகையைப் பார்த்தான்.
உடனே அவளருகில் போனான்
"கண்மூடித்தனமாகப் பலகையைக்
கழற்றி விடாதே!
கடைசியில் அது
உனக்கே பயன்படும்" என்று
உபதேசம் செய்தான்!

*

நீண்டநாள் நண்பர்கள்
புகைப்படம் எடுக்கப்
போனார்கள்.
புகைப்படம் எடுப்பவர்
நேரம் கடத்தினர்.
உடனே ஒரு நண்பர்

"அவர் நம்மைப்
புகைப்படம் எடுக்கவில்லை!
உடனே படம் பிடிக்கும்
கருவிக்குப்
பின்னாலே நின்றுகொண்டு
ஓவியம் தீட்டுகிறார்" என்றார்.

*

எனது தாத்தாவின் மரணத்திற்கு
மறுநாள்
அவருடைய உயிர் நண்பர் ஒருவர்
வீட்டுக்கு வந்தார்.
பெருமூச்சால் எங்களை வேகவைத்தார்.
கண்ணீர்த் துளிகளால் பூமியெல்லாம்
சோகத்தை விதைத்தார்!
இந்தத் திண்ணையில்தானா — அவன்
உட்காருவான் என்று கேட்டுவிட்டு
அங்கே போய் உட்கார்ந்தார்.
இந்தக் கூடத்தில்தான் உலவுவானா
என்று நடை பயின்றார்.
சமையல் கட்டிற்குள் ஓடிவந்து
இந்த வட்டிலில்தானா சாப்பிடுவான்
என்று கைகழுவித்
தாய்நாட்டுப் பசியை எல்லாம்
தீர்ப்பதுபோல் சாப்பிட்டார்—

எனக்குள் ஒரு கற்பனை—
இவர் மட்டும் சமாதிக்குப்
போயிருக்க வேண்டும்
போயிருந்தால்—
இந்தக் குழியில்தானா அவன்
உறங்குகின்றான் —
அதற்குள் நானும் போகிறேன்
என்று நாடகம்
போட்டிருப்பார்!

*

என்னிடம் ‘மூடபக்தி’ கேட்கும் யாரையும்
என்னால் குருவாக ஏற்க முடியாது!
அவருக்குச் சீடனானால்
சுயமாகச் சிந்திக்க முடியுமா?
குடை ராட்டினத்தில் —
முன்னாலே போகும் குதிரையைப்
பின்னாலே வரும் குதிரையால்
முந்த முடியாது!

*

வயதான தந்தை மகனைப் பார்த்தார்.
கோபத்தால், முகம் சுட்டார்.
‘பல்லைக் கழற்றி விடுவேன்’ என்றார்!

“தாராளமாக! உங்கள் பல்செட்டை
நீங்கள் கழற்றலாம்” என்று
தந்தைக்கு மகன்
அனுமதி கொடுத்தான்!

*

ஒரு உழைப்பாளி —
கடலில் முத்தெடுப்பான்.
சோம்பேறி அதன்மீது
கல்லெடுத்து வீசுவான்!

*

சந்தேகம் ஆபத்தானது.
அதற்கு அடிமை ஆகும் மனிதன்
“அடுத்தவன் கோள் சொல்லும்போது
ஆண்டவன் அசரீரி
சொல்வதுபோல் கேட்பான்!”

*

இந்தியாவிற்குச் —
சுதந்திரம் வந்தபோது,
நான் மட்டும்
அடிமையானேன்!
ஆம்! அன்றுதான் நான்

ஆரம்பப் பள்ளிக் கூடத்திற்கு
அனுப்பப்பட்டேன்.

*

அரசியல் தலைவர்களுக்கு,
அளவோடு சிலை வைக்க வேண்டும்.
இல்லாவிட்டால் —
தியாகராய நகரில்
"திடீர்ப் பிள்ளையார்"
முளைத்த மாதிரி,
தெருவெல்லாம்
தலைவர்களின்
சிலை உருவம் முளைத்துவிடும்

*

மேடைப் பேச்சாளர்
ஆவேசத்தோடு பேசும்போது —
முன்னாலே அமர்ந்து கொண்டு
ஒருவன்
அடிக்கடி சத்தம் போட்டான்.
அதனால் எங்கும் சலசலப்பு,
"இது, பனங்காட்டு நரி!
சலசலப்பிற்கு அஞ்சாது!"
சவால் விட்டார் பேச்சாளர்.
கூட்டத் தலைவர் காதருகில் குனிந்து

"இந்தச் சலசலப்பே
பனங் காட்டுக் கள்ளின்
படையெடுப்புத்தான்"
என்ருர்.
கோடையிடிப் பேச்சாளர் ஒரு
சோடாவை உடைத்துக்
குடித்துவிட்டு
உட்கார்ந்து கொண்டார்!

*

கடைசியிலே — தன் மகனை
மண்தின்னப் போகும் ஆத்திரத்தால்தான்
தனது கர்ப்ப காலத்தில்
தாய் 'மண்' தின்கிருளோ?

*

பெயருக்கும் —
ஜீவராசிகளுக்கும்
பொருத்தமில்லாத உலகம்!
'மூட்டைப் பூச்சி' என்ருல்
அதற்குள்ளே
ஒரு மூட்டை ரத்தமா இருக்கிறது?
'முத்து' என்று ஒருவனுக்குப் பேரிட்டுக்
'காதணி விழா' நடத்திஞல்

அவனைத் தூக்கிக்
கடலுக்குள்ளே எறிய முடியுமா?

*

ஒத்தையடிப் பாதையிலே —
எதிரெதிரே இரண்டுபேர்
சந்தித்தார்.
ஒருவன் "முட்டாளுக்கு நான்
வழிவிடமாட்டேன்" என்றான்.
அடுத்தவன் "அதுதான் என்
முதல் வேலை"
என்று
மூளையைப்
பேச வைத்தான்.

*

காகிதத்தை அரசாளும்
கற்பனை நாடுகளை (Utopia) உருவாக்கித்
தாங்களே தலைவர்களான
எழுத்தாளர்கள் ஏராளம்!
அவர்களுக்குள்
தலைவன் ஒருவன் தன்நாட்டில்
தலைசீவும் சீப்பு
தொண்ணூறு அடிநீளம்
இருக்கவேண்டும் என்றான்.

அப்படி ஒரு கனவு நாடு
உருவாகி இருந்தால்
சீவும் போதே
பொதுமக்கள்,
தேகப்பயிற்சி செய்திருப்பார்.

*

அவனும், அவளும்
இலக்கியக் காதலர்கள்.
தெரு வழியே கடற்கரைக்கு
நடந்து வரும்போதோ —
அவன் 'உயிரே' என்றான்!
அவள் 'ஆருயிரே' என்றாள்!
காதலர் பாதையில் —
கட்டுத்தறியை
அறுத்தெறிந்துவிட்டு
ஒரு எருமை மாடு
கருத்த புயல் வேகத்தில் வந்தது.
அப்போது
"உயிர்" ஒரு மைல் தூரத்திற்கு
ஓடிப் போனது.
"ஆருயிர்" ஆறு மைல்
தொலைவிற்குப் போய்
அமைதியுடன் நின்றது!

*

ஒரு பிரச்சினைக்கு
ஓராயிரம் பேரிடம்
யோசனை கேட்கக் கூடாது!
கடியார 'ரிப்பேர்'க் கடையில்
சரியான நேரம்
பார்க்க முடியுமா?

*

தேசத்தில் சமதர்மம் சிருஷ்டித்த
தியாகத் தலைவர்கள்
மயானத்திற்குப் போய் விட்டால்—
ஒரு மனிதனின் குரலைப் போல்
உலகம் அழுகிறது!
அவருடைய மரணத்திற்கு
மழைக் காலத்துக்
குயிலைப் போன்ற ஊமைமனம்—
வார்த்தைகளையே
உணவாக்கிக் கொண்ட நாக்கு
வணக்கம் செலுத்துகிறது!
யாருடைய மரணத்திற்குப் பின்னால்
வசந்தகாலமே
அவர்களின் கல்லறைக்குச்
சொந்தமாகி உதிர்கிறதோ—
யாருடைய மரணம்—

என் தேசத்தின்
இளம் தாய்மார்களைக் கூட,
அழகான குழந்தைகளுக்குத்
தாலாட்டுப் பாடவிடாமல்,
அவர்களுக்கு ஒப்பாரி
பாடச் செய்கிறதோ—
யாருடைய மரணத்திற்குப் பின்னால்
இரு வர்ணக் கொடியும்
மூவர்ணக் கொடியும்,
பிறைக் கொடியும்,
செங்கொடியும்,
பின்னால் அசைந்துவர,
கறுப்புக் கொடிகள்
'தலைமை' தாங்கும்
சோக ஊர்வலங்கள் நடக்கிறதோ,
அவர்கள்—
மனிதரல்ல, தலைவர்களும் அல்ல
மண்ணின் சரித்திரங்கள்!

*

வானத்திலே வெண்ணிலவு வருகிறது!
அதைப் பார்த்து —
வீட்டு விளக்குகளை
அணைத்துவிட முடியுமா?

அதைப் போலவே —
தேசத்திற்கே ஒளி கொடுக்கும்
சந்திரனுய் ஆனுலும் —
அந்த உயரத்தில் தன்னை
உட்கார வைத்த
தொண்டர்களை
ஆணவத்தால் யாரும்
அலட்சியப் படுத்தவேண்டாம்!

*

கும்மிருட்டின் —
புழுக்கத்தைவிட
நெருப்பாகப் பரவும்
சூரிய வெளிச்சத்தின் சூடு
கொடுமையானது.
இருட்டை
உழுதுவிட்டு
ஒளியை விதையுங்கள்.
இருட்டின் முகம் வெறுத்து
நெருப்பு வைத்து எரித்துவிட்டால் —
வெற்றிக்குப் பின்னுலே
வெற்றிடம்தான் மிஞ்சும்!
எப்போதும் புரட்சிப்
பாதையில் வழி மறிக்கும்

எதையும் நாம் உடைத்தெறிவோம்.
அப்போதே
புதிய
பயணம் புறப்படும் ஓர்
இதயத்தைப் படைத்திடுவோம்!

*

நாங்கள்,
கல்லூரியில் படித்தபோது,
கம்பனைப் படித்தோம்.
காளிதாசனைப் படித்தோம்.
ஷேக்ஸ்பியரைப் படித்தோம்,
இளங்கோவைப் படித்தோம்.
ஆனால் — இப்போதுதான்
"எம்பிளாய்மெண்ட் அதிகாரி"
எவ்வளவு பெரியவர் —
என்ற விவகாரம் புரிகிறது!

*

இரண்டு பெண்கள்
என்னிடம் கேட்டார்கள்,
எங்களில் "யார் அழகி?" என்று.
யாராவது வருத்தப்படுவார்கள் என்று
பாராமல் பதில் சொல்லுங்கள் என்றார்கள்.

என்ன செய்ய?
அடியேன் பதில் சொன்னல்
அவர்கள் இரண்டு பேருமே
வருத்தப்படுவார்கள்!!

*

கவிஞர்கள்
வறுமையின் குழந்தைகள் — அவர்கள்
காசுக்கு ரெண்டு ஆப்பிள் விற்ருலும்
வெள்ளரிப் பிஞ்சுகளை
வாங்கத்தான் வருவார்கள்.

*

எத்தனையோ ஆண்டுகள் கடந்து
இப்போதுதான் — நான்
எங்கள்
ஊருக்கு வருகிறேன்!
வெண்ணிலவு சிரிக்கிறது!
தென்னங்காற்று வீசுகிறது!
கொடிக்கால் வேலிகளின் மேல்
கன்னங் கருத்த இலைகளிலே
மின்மினிப் பூச்சிகள்
இருட்டுக்குப்
பொட்டு வைக்கிறதே?

ஏன்?
ஓ — ஒரு கவிஞனைப்
பார்த்துவிட்ட
கர்வமா?

*

மரத்தடி நிழலில்—
லாடக்காரன் ஒருவன்
மாட்டுக்கு லாடம் அடிக்கிறான்!
ஓய்வுபெற்ற அரசாங்க ஊழியர்
உட்கார்ந்தபடி அவனையே
பார்க்கிறார்.
"உங்களுக்கும் ஒரு ஜோடி
லாடம் வேண்டுமா" என்று
வேடிக்கையாகக் கேட்கிறான்.
அவர் உதடுகள் பேசவில்லை!
ஆனால் — மனம் கேட்கிறது—
இந்த அடிமை
உலகத்தை விட்டு வானத்தில்
உயரப் பறப்பதற்கு
உன்னால்—
ஒரு கோடிச் சிறகுகளைத்
தருவதற்கு முடியுமா?

*

